# ஸ்ரீ ராமாநுஜன்—121

மதராஸ் ஸ்த்க்ரந்த ப்ரகாசந ஸபையின் சார்பாக மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை

ஆசிரியர் :

ஸ்ரீகாஞ்சீ. பிரதிவாதிபயங்கரம் **அண்ணங்கராசாரியர்.**

ஸம்புடம் 11 | விலம்பிளு தைமீ 1959 ஜனவரிமீ | ஸஞ்சிகை 1


## திருவாய்மொழி நூற்றந்தாதி 13.

ஊனமறவேவந்து உள்கலந்த மாலினிமை
யானது, அனுபவித்தற்காந்துணையா—வானில்
அடியார் குழாங்கூட ஆசையுற்ற மாறன்
அடியாருடன் நெஞ்சே யாடு,

| | | | |
|---|---|---|---|
| நெஞ்சே | மனமே !; | வானில் | பரமபதத்திலுள்ள |
| ஊனம் அறவே வந்து | குறையற வந்து | அடியார் | அடியவர்களான நித்ய முக்தர்களினுடைய |
| உள் கலந்த | அந்தரங்கமாகக் கலந்த | குழாம் | கோஷ்டியிலே |
| மால் | ஸர்வேச்வரனுடைய | கூட | அந்வயிக்க |
| இனிமை ஆனது | கலவியின்பத்தை | ஆசை உற்ற | குதூஹலங்கொண்ட |
| அனுபவித்தற்கு | அனுபவிப்பதற்கு | மாறன் | நம்மாழ்வாருடைய |
| ஆம் துணை ஆ | அநுகூலமான ஸஹவாஸம் அபேக்ஷிதமாக, | அடியாருடன் | பக்தர்களோடே கூடி |
| | | ஆடு | அநுபவிக்கப்பார். |

* ஊனில்வாழுயிரேயென்னும் திருவாய்மொழியில், தம்மோடே ஏகதத்துவமென்னும்படி எம்பெருமான் ஸம்ச்லேஷிக்க, அதனால் பரமானந்தம் பொலிய நின்ற ஆழ்வார் அந்த எம்பெருமானது பரம போக்யதையைத் தனியே அநுபவித்து த்ருப்திபெறமாட்டாமல் உசாத்துணைவேண்டிப் பரமபதத்தில் நித்ய முக்தர்களினுடையதிரளோடே அந்வயிக்கப் பெறவேணுமென்று ஆசைகொண்டார்; அன்னவரதுபக்தர்களுடனே நெஞ்சே! நீ கூடிக் களிப்பாயாக—என்றூராயிற்று.

* ஊனில்வாழுயிரேயென்கிற இந்தமூன்றாந் திருவாய்மொழியானது இரண்டாந் திருவாய்மொழியாக இருந்திருக்கவேண்டும். முதல் திருவாய்மொழியில் [வாயுந் திரையுகளில்] பட்ட ஆர்த்தி தீர எம்பெருமான் வந்து ஸேவைஸாதித்து ஸம்ச்லேஷரஸாநுபவத்தையும் கொடுத்தருள, அந்த ஆனந்தத்தைத்தெரிவிப்பதான இந்தத் திருவாய்மொழி முன்னமே அமைந்திருக்கவேண்டியதாயினும், எம்பெருமானுடைய பரத்வாநுபவம் இடையில் ப்ராஸங்கிகமாக ப்ராப்தமாயிற்று. இப்படிப்பட்ட பராபரனன்றோ நம்மோடு இங்ஙனே கலந்தருளினனென்று முந்துறப் பரத்வம் அநுஸந்தான விஷயமானபடியாலே அது சொல்லிற்றாயிற்று கீழ்த்திருவாய்மொழி

யில். அது பேசியானவாறே * வாயுந்திரையுகளில் ஆர்த்திதீரவந்து ஸம்ச்லேஷித்த தனுலுண்டான இன்பம் இத்திருவாய்மொழியில் அருளிச்செய்யப்படுகிறது.

இந்தப் பேரின்பத்தை யநுபவிப்பதற்கு உசாத்துணையாவார் இந்நிலத்தில் ஆரேனுமுளரோ? என்று பார்க்கையில் *உண்டியே உடையே உகந்தோடுமிம் மண்டலத்திலே அப்படிப்பட்டாரொருவருங் கிடையாமையாலே எம்பெருமானை நித்யாநுபவம்பண்ணுகிற நித்யஸூரிகளின் திரளிலே போய்ப்புகுந்து அவர்களோடு ஒரு கோவையாக அநுபவிக்கப்பெறுவது என்றைக்கோ எனகிற குறையோடே இத்திருவாய்மொழி தலைக்கட்டுகின்றது. ... ... ... *

---

## அன்பர்களுக்கு அறிவிப்பு

நமது ஸ்ரீராமாநுஜனுக்குப் பத்து பிராயம் பூர்த்தியாகிப் பதினோராவது பிராயம் பிறந்து விட்டதின்று. இனி மேன்மேலும் வளர்ந்து செல்லவேண்டும். இதுகாறும்போல் மாதத்திற்கு ஒரு முறையே வெளிவந்தால் அது வளர்ச்சியாகாது. மாதத்திற்கு இருமுறை வெளிவரும்படி எம்பெருமான் அருள்புரிய வேண்டும். எம்பெருமானுடைய அருளைக்காட்டிலும் அவனடியார்களின் அருளே மிக முக்கியமானது. பரமபாகவதோத்தமர்களான நீங்கள் எவ்விதமான அருளைச் செய்யவேண்டு மென்பதையும், எவ்விதமான அருளைச் செய்தால் நமது ஸ்ரீராமாநுஜனுக்கு அபிவிருத்தியாகு மென்பதையும் நீங்கள் தெரிந்து கொள்ளாமலிருந்தாலன்றோ நாம் தெரிவிக்கவேண்டும். ஆகவே புதிதாக நாம் தெரிவிக்க வேண்டுவதொன்றுமில்லை.

கிடைக்கிற பத்ரிகைகளை மேல் கவரைக்கூட பிரிக்காமல் உள்ளே போட்டு விடுவதுண்டு; நமது ஸ்ரீராமாநுஜனை அப்படி யாரும் உபேக்ஷிப்பதில்லை; ஒவ்வொருவரும் ஆழ்ந்து அநுபவித்து வருகிறார்களென்பதை நாம் நன்கு உணர்ந்து வருகிறோமாதலால் இதையே ஒரு பேருபகாரமாகக் கருதுகின்றோம். இதர பத்ரிகைகள் பல பண்டிதர்களின் வியாஸங்களினால் நிரப்பப்படுகின்றன. அப்படி ஒருவரும் நமது பத்ரிகைக்கு வியாஸம் உபகரிப்பதில்லை. அதை நாமும் எதிர் பார்ப்பதில்லை. ஸமயாநுகுணமாக ஆவச்யகமாய்த் தோன்றுகிற விஷயங்களை யெழுதி வெளியிட்டு வருகிறோம். அவற்றை அன்பர்கள் அநுபவித்து அப்போதைக்கப்போது தமது ஆனந்தத்தை அபரிமிதமாகத் தெரிவித்து வருகிறார்கள். அதற்கு நாம் மனப்பூர்வமாக நன்றி செலுத்துகிறோம்.

சென்ற வருஷத்தில் கம்பரின்பக்கவித்திரட்டு பிரசுரம் செய்ய ஆரம்பித்துப் பூர்த்தியடையாமல் நின்றிருக்கிறது. அப்படியே ஸ்ரீதேசிக ஸ்தோத்ரங்களுக்கும் வியாக்கியானம் வெளியிடத் தொடங்கி, சில ஸ்தோத்ரங்களுக்கு மட்டுமே பூர்த்தியடைந்திருக்கிறது. க்ரமேண எல்லா ஸ்தோத்ரங்களுக்கும் வெளிவரவில்லையேயென்று பலர் நினைப்பூட்டுகிறார்கள். எதுவும் அபூர்ணமாய் நிற்காது. இப்போது வெளியிடப்பெற்று வருகிற தேசிகப் பிரபந்தவுரை அம்ருதாஸ்வாதினியோடு நிறுத்தப்படு மடுத்த ஸஞ்சிகையில். உரை இவ்விதமாக அமையவேணுமென்று காட்டுவதற்காகவே ஆதர்சரூபமாக இது வெளியிடப்பட்டது. ஏற்கெனவே தொடங்கினவைகள் பூர்த்தியானபின்பு இதையும் பூர்த்திசெய்ய நேர்ந்தால் பரமபாக்யம். சந்தா பாக்கியை அவரவர்கள் அன்புடன் அனுப்பவேணும்.

---

ஸ்ரீ:

# ஸாரார்த்தஸங்க்ரஹம்.

நம்முடைய பூர்வாசார்ய திவ்யஸூக்திகள் கடல்போன்றவை. அருளிச்செயல் வியாக்கியானங்களென்றும் ரஹஸ்யவியாக்கியானங்களென்றும் அவதரித்துள்ள திவ்யக்ரந்தங்களில் மணிமணியான வார்த்தைகள் பலபலவுள. அந்தவந்த க்ரந்தங்களை நாம் ஸேவித்துக்கொண்டு போம்போது 'இவை அருமை பெருமை வாய்ந்த வார்த்தைகள்' என்று நமது மனத்தில் தோன்றும்; பிறகு அவை மறந்து போம். அவற்றைத் தனியாக வெடுத்து எழுதிவைத்தால் ரஸிகர்களுக்கு மிகவும் பயன்படுமென்று தோன்றி இந்த ஸாரார்த்தஸங்க்ரஹ மெழுதப்படுகின்றது. இதில் பூர்வாசார்ய ஸ்ரீஸூக்திகள் அப்படியப்படியே காட்டப்படுவதில்லை. அந்த ஸூக்திகளை நாம் மனத்திலே வைத்துக்கொண்டு அவற்றை நன்கு விவரித்துக்காட்டுகிறோம்.

## எம்பெருமான் நம்மிடமெதிர்பார்த்திருப்பது எது ?

எம்பெருமான், சேதனர்களையும் அசேதநங்களையும் சரீரமாகக் கொண்டவன். அவன் பெருமையில் தலைநின்றவன். நாம் சிறுமையில் தலைநிற்பவர்கள். நாம் அப்பெருமானை வழிபடுவதற்கு உரியோம். அப்பெருமான்திறத்து நாம் செய்யக்கூடிய வழிபாடுகள் பலவகைப் பட்டிருக்கும். அவற்றைப் பற்றின விரிவுகள் சாஸ்திரங்களில் விசதமாகக் காணக் கிடைக்கும். அந்த வழிபாடுகளெல்லாம் ஒரு புறமிருக்கட்டும். அவாப்த ஸமஸ்த காமனான பெருமானுக்கு நாம் செய்யும் வழிபாடுகள் அவனுக்கு என்ன பயனைத் தரப்போகின்றன ! நம்முடைய ஸ்வரூபம் நிறம் பெறுதற்காகவே நாம் வழிபடுவோமத்தனை.

எம்பெருமான் அல்பஸந்துஷ்டன்; அநாதிகாலமாக அவனோடு எதிரம்புகோக்கின்ற (அதாவது—விவாதப்படுகின்ற) கொடிய ஸம்ஸாரிகள் நாம். அந்த நிலையில் நின்றும் நாம் நீங்கி அவனோடு நமக்குண்டான ஒழிக்க வொழியாத உறவுகளைத் தெரிந்து கொண்டோமாயின் இதுவே பரம பூஜையாகும். ஸம்பந்த ஜ்ஞான மாத்திரமே நமக்கு மேலான நன்மைகளுக்கு எல்லை. அஃது உண்டானால் நாம் எம்பெருமானோடு விவாதப்படமாட்டோம். விவாதம் தொலைந்ததென்னில் எவ்விதப் பணிவிடைகளும் நாம் செய்தோமாவோம். விவாதமற்றிருப்பதே பெரிய பணிவிடையாம். இதையே எம்பெருமான் நம்மிட மெதிர்பார்த்திருப்பது.

## மநுமஹர்ஷியின் வசனமொன்றை விவரித்தல்.

மநுஸ்ம்ருதியில் (8—92) "யமோ வைவஸ்வதோ ராஜா யஸ் தவைஷ ஹ்ருதி ஸ்தித:, தேநசேத் அவிவாதஸ் தே மா கங்காம் மா குரூந் கம:" என்று சொல்லிற்று. இதன் கருத்தாவது: ஸர்வநியாமகனும் தண்டதரனும் (அல்லது ஸூர்ய வம்சத்திற் பிறந்தவனும், அல்லது ஆதித்ய மண்டல வாஸியாயும்) எல்லார்க்கும் இனியனுமிருக்கிற எம்பெருமான் உனது உள்ளத்தினுள்ளேயுளன்; அவனோடு விவாதம் நெடுநாளாக அநுவர்த்தித்துக் கொண்டு வருகிறது; அதாவது, இந்த ஆத்மவஸ்துவை அவன் தன்னுடையதாக அபிமானித்தால் அதற்கு இசையாதே 'இது என்னுடையதுதான்' என்று செருக்கியிருப்பதுவே விவாதம். இது தொலைந்தொழியுமாகில், கங்கை முதலிய புண்ணிய தீர்த்தங்களில் குடைந்தாடப் போகவும் வேண்டா; குரு க்ஷேத்ரம் முதலிய புண்ய க்ஷேத்ரங்களை ஸேவிக்கப் போகவும் வேண்டா. அஹங்காரமமகாரங்களை உள்ளே வைத்துக்கொண்டு பிராயச்சித்தம் பண்ணுகையாவது ஒரு பாத்திரத்தினுள்ளே அசுத்த வஸ்துவை யிட்டுவைத்து மேலே பளபளவென்று சுத்தி செய்வது போலாதலால்,

உள்ளே எம்பெருமானோடு விவாதத்தை வைத்துக் கொண்டே க்ஷேத்ர தீர்த்த யாத்திரை செய்வது எதற்கு? அந்த விவாதம் தொலைந்துவிடின் இருந்த விடத்திலேயே பரம சுத்தியுண்டாதலால் ஒரு க்ஷேத்திரத்தையும் ஒரு தீர்த்தத்தையும் தேடிப் போகவேண்டா என்றபடி. ஆகவே விவாதம் நீங்குமளவே வேண்டுவது.

## கூரத்தாழ்வான் ஸ்ரீஸூக்தியொன்றை நிரூபித்தல்.

கூரத்தாழ்வானும் வரதராஜ ஸ்தவத்தில் "த்வத்தாஸ்யமஸ்ய ஹரி மம ஸ்வரஸப்ரஸக்தம் தச்சோரயந்நயமஹம் கில சஸ்கல ப்ராக், த்வம் மாமகீந இதி மாம் அபிமந்யஸேஸ்ம ஹஸ்தீச ஸம்சமய நஸ் தமிமம் விவாதம்" என்ற ச்லோகத்தினால் இதனைத் தெரிவித்தருளினர். இந்த ச்லோகத்தின் கருத்தாவது, பேரருளாளனே! மஹாபாபியான எனக்கு உன் பக்கலில் அடிமையா யிருப்பதன்றோ உற்றது. அப்படியிருந்தும் நான் நெடுநாளாக ஆத்மாபஹாரக் கள்வனாகி அடிமைச் சுவடுதன்னை இழந்து போந்தேன். நடுவே வந்துய்யக் கொள்கின்ற நாதனாகிய நீ 'இவன் நம்முடையவன்' என்று கொண்டு ஸ்வயமேவ அபிமானித்தருளினாய். ஆனாலும் உனக்கும் நமக்கும் அடிக்கடியொரு விவாதம் நடந்து போருவதுண்டு; 'நான் உன்னுடையவனல்லேன் காண்' என்று ஸம்ஸாரியான நான் அகன்று போவதும், 'நீ என்னுடையவன் காண்' என்று நீ பின் தொடர்வதுமான அந்த விவாதம் இனியொருகாலும் தலையெடுக்க வொண்ணாதபடி ஸமூலசாந்தி செய்தருள வேணுமென்பதாம்.

## பட்டருடைய ஸ்ரீஸூக்தி.

பட்டருளிச்செய்த "த்வம் மேஹம் மே குதஸ் தத் ததபி குத இதம் வேதமூல ப்ரமாணாத்" என்கிற திருமஞ்சனக் கவியான ச்லோகரத்னம் நம்முடைய விரிவான வியாக்கியானத்தோடு அநுபவிக்கத் தக்கது. ஸர்வேச்வரனுக்கும் சேதநனுக்குமுண்டான விவாதத்தின் ப்ரகாரம் அதில் வெகு அற்புதமாக நிரூபிக்கப்பட்டிருப்பது காண்க.

## நம்பிள்ளை காட்டியருளின நற்கதை யொன்று,

ஸம்பந்தவுணர்ச்சி உறைப்பாக உண்டாவதுதான் விவாதம்தொலைந்தபடியாகக் கருதத்தக்கது. ஸம்பந்தஜ்ஞான முண்டான வளவிலேயே நாம் வாழ்ச்சி பெற்றோமாவோம். இதுபற்றி ஈடு முப்பத்தாறாயிரப் படியில் (1-2-7) ஒரு வணிகன் கதை காட்டப்பட்டுள்ளது. அதனைத் தெளிய உரைப்போமிங்கு :- ஒரு நகரத்தில் ஒரு வணிகர்தலைவனிருந்தனன். அவன் வெளிநாடுகளில் நீண்டகாலம் வஸித்து வர்த்தகஞ் செய்து விசேஷமாகப் பொருள்படைக்க விரும்பி த்வீபாந்தர யாத்திரை செய்ய முயன்றான். அத்தருணம் அவனது மனைவி கருவுற்றிருந்தாள். அப்போதே அவன் புறப்பட்டு த்வீபாந்தரம் சென்று சேர்ந்தனன். பிறகு இரண்டொரு மாதங் கடந்தபின் அவனது மனைவி ஊரில் ஒரு புதல்வனை யீன்றாள்; அம்மகன் நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாகச் சுக்கில பக்ஷத்துச் சந்திரன் போன்று வளர்ந்து வருகின்றான். த்வீபாந்தரத்தில் வர்த்தகஞ் செய்து வாழ்ந்து கொண்டிருக்கும் அவ்வணிகன் மகப்பேறு உண்டான செய்தியை யறிந்து பெருமகிழ்ச்சி கொண்டு விரைவிலேயே ஊர்வந்து சேர்வதற்குப் பெருமுயற்சி செய்தும், மேன்மேலும் வர்த்தகத்தில் மீதூர்ந்துசென்ற மிலைப்பினால் கடுக மீண்டுவர முடியாமல் நெடுங்காலம் அங்கேயே தங்கிவிட்டான். மகன் தானும் உரிய வயது வாய்ந்த வளவில் தனது குலத் தொழிலாகிய வர்த்தகத்தையே தானும் கைப்பற்றி வந்தான். வயது முதிர்ந்த வளவிலும் இவனது தகப்பன் த்வீபாந்தரத்திலேயே வாழ்கிறான். பின்பொருநாள் அவ்வணிகன்மகன் தொழில் முறையில் வெளிநாட்டிற்குச் சென்றிருந்து பல சரக்குக்களுடன் கடல் வழியாய் ஊர்த்துறைமுகம் வந்து சேர்ந்தான்,

அவன் வந்த கப்பலிலேயே அவனது தந்தையும் த்வீபாந்தரத்திலிருந்து பல மூட்டைகளுடன் ஊர்வந்தனன். அந்தக் கப்பல் துறைமுகஞ் சேர்ந்தவுடனே குமாரன் தனது மூட்டைகளை இறக்குவதாக உத்தேசித்த ஓர் இடத்திலேயே தகப்பனும் தான் கொணர்ந்த மூட்டைகளை இறக்க நினைத்தான். இவ்விருவரும் தங்களுக்குள்ள பித்ரு புத்ரபாவ ஸம்பந்தத்தை அறியாதவர்கள்; 'இவன் நம் மகன்' என்று தந்தை அறியான். 'இவர் நம் தகப்பனர்' என்று மகனுமறியான். உண்மையில் இவர்கட்கு இவ்வுறவுமுறை தெரிவதற்கு ப்ரஸக்தியில்லையே. இக்குமாரன் பிறப்பதற்கு முன்னமே யன்றோ அவ்வணிகன் வெளிநாடு சென்றிட்டான். ஆகவே 'இவன் வெளிநாட்டு வர்த்தகன்' என்று மகன் பாவிக்கலானன் தந்தையும் மகனை அங்ஙனமே பாவித்தான். இறக்குமதி யிடத்தைப்பற்றிய விவாதம் இவர்கட்கு முற்றிவிட்டது. 'இவ்விடத்தை நானே முதலில் உத்தேசித்தேன்' என்று இருவரும் நெடும்போதாக வாதாடுகின்றனர். அப்போது இவ்விருவருடையவும் உறவுமுறையை உணர்ந்திருப்பாரொரு கிழவன் கண்டு 'அந்தோ! உறவு அறியாமல் இது என்ன விவாதம்?'' என வருந்தி 'இவன் உன் தந்தை, நீ அவனது மகன்; ஆயிருக்க ஏதுக்கு இங்ஙனே வீண் விவாதம்?'' என்றறிவித்தனன். அதன் பிறகு அங்கு என்ன நடந்திருக்கவேணும்! ஸம்பந்த வுணர்ச்சி யுண்டானவுடனே கீழிழந்த நாளைக்குச் சோகித்து, இருவர் சரக்கும் ஒரு சரக்காய், தந்தை ரக்ஷகனுய், மகன் ரக்ஷ்யனுய் விவாதம் தொலைந்து பரம ரஸம் தலைப்பற்றி வாய்க்கொண்டவாறு பேச்சுக்கு நிலமாமோ? நாமும் நிருபாதிக பிதாவாகிய ஸ்ரீமந் நாராயணனுடைய "உன்றன்னோடுறவேல் நமக்கு இங்கொழிக்க வொழியாது'' என்னும்படியான உறவின் உறுதியை உற்று நோக்கி ஈச்வரன் "த்வம் மே'' [நீ எனக்கு அடியன்] என்றால், "அஹம் மே'' (நான் எனக்கு உரியேன்) என்னும்படியான விவாதத்தை விட்டொழித்தால் "பொன்னுலகாளீரோ புவனி முழுதாளீரோ'' என்னும்படியாக உபய விபூதியும் நாம் தாராளமாக அநுபவிக்கும் செல்வமாகுமன்றே.

## ரஸமான சிறுகதை யொன்று.

மாலைப் பொழுதில் விஹாரார்த்தமாக வெளியே சென்ற ராஜகுமாரன் அழகியதொரு தோட்டத்தைக் கண்டு உள்ளே புகுந்து திளைக்க நினைத்தும் கட்டுங்காவலுமாயிருந்தது கண்டு அஞ்சி நிற்குமளவில் 'இஃது உன் தகப்பனுருடைய தோட்டங்காண்' என்று ஒரு பெரியார் தெரிவிக்கவே, பிறகு தேங்காதே புக்கிருந்து திளைக்கலாயிற்று என்ற வொரு கதையையுங் காட்டுகிறார் நம்பிள்ளை. அது அவனுடைய தகப்பனது தோட்டமாயிருக்கச் செய்தேயும் அது தெரியாதிருந்த வளவில் உள்ளே புக அஞ்சினன். தெரிந்தவாறே தேங்காதே புக்குத் திளைத்தான்.

## நவவித ஸம்பந்த நிரூபணம்.

எம்பெருமானுக்கும் நமக்குமுள்ள ஸம்பந்தம் ஒன்றன்று, இரண்டன்று; ஒன்பது வகையான ஸம்பந்தங்கள் திருவஷ்டாக்ஷர மஹாமந்திரத்திலிருந்து கிடைக்கின்றன. அத்திருமந்திரம் நமக்கு மங்கலஸூத்ரம் போன்றது என்று ஆசார்யர்கள் அருளிச்செய்கிறார்கள். உலகில் ஒரு கன்னிகையின் கழுத்தில் தாலி ஏறினவாறே தம்பதிகளுக்கு பர்த்ரு பார்யாஸம்பந்தம் என்ற உறவு ஏற்பட்டதாகும். திருமந்திரமாகிற மங்கள ஸூத்ரம் நமது கழுத்தில் ஏறினவாறே ஒரு உறவு அல்ல; ஒன்பது உறவுகள் ஏற்பட்டனவாகும்.

## ப்ரணவத்தின் அகாரத்தில் தேறிய உறவுகள் மூன்று.

எங்ஙனே யென்னில்; அதில் முதல் பதம் ப்ரணவம். அது அகாரமென்றும் உகாரமென்றும் மகாரமென்றும் [மூன்றக்ஷரமான] மூன்று பதங்கொண்டது. முதற்பதமான அகாரத்தில் மூன்று உறவுகள் தோன்றும். 1. பிதா புத்ரபாவம்

2. ரக்ஷ்ய ரக்ஷகபாவம். 3. சேஷ சேஷிபாவம். அந்த ஒரு அக்ஷரத்தில் இந்த மூன்று உறவுகள் எங்ஙனே தோன்றுகின்றன வென்னில்; அகாரத்திற்கு ப்ரக்ருதிசக்தியென்றும் தாது சக்தியென்றும் இரண்டுவகையான சக்திகளுண்டு. "அகாரோ வை ஸர்வா வாக்." என்றும் "அகர முதலவெழுத்தெல்லாம்" என்றும் சொல்லுகிறபடியே அகாரமானது எல்லா எழுத்துக்களுக்கும் முதன்மையாயிருந்துகொண்டு, தனக்கு அர்த்தமான எம்பெருமான் உலகுக்கெல்லாம் முதல்வன் என்று காட்டுதலாகிறவிது ப்ரக்ருதி சக்தியெனப்படும். "ஆதிபகவன் முதற்றே யுலகு" என்ற குறளும் இதனையே காட்டிற்றாகும். ஆகவே, அகாரத்தில் ப்ரக்ருதி சக்தியினால் ஏற்பட்ட வுறவு கார்ய காரண பாவம் (அல்லது) ஜந்ய ஜநகபாவம், (அல்லது) பிதா புத்ர பாவம். அந்த அகாரமானது (அவ-ரக்ஷணே) என்கிற தாதுவிலிருந்து தேறினதாகையாலே எம்பெருமான் ஸர்வரக்ஷகன் என்றதாகும். இதனால் ரக்ஷ்ய ரக்ஷக பாவமாகிற வுறவு தேறிற்றாகிறது. இதுதான் தாது சக்திஸித்தமெனப்படும். இந்த அகாரத்தின்மேல் வியாகரண சாஸ்த்ரப்படி (வைதிக ப்ரக்ரியையில்) சதுர்த்தீ விபக்தியிருந்து லோபித்ததாகக் கொள்ளப்படுகிறது. இல்லாவிடில் அந்வயிக்கவே மாட்டாது. அந்த விபக்தியானது 'அவனுக்கு சேஷப்பட்டது' என்கிற பொருளைக் காட்டுதலால் (3) சேஷ சேஷி பாவம் என்கிற வுறவு தேறிற்று.

## உகார மகாரங்களால் தேறு முறவுகள் இரண்டு.

இனி அடுத்துள்ள உகாரமானது அவதாரணப் பொருளதாய் எம்பெருமானுக்கே சேஷப்பட்டது என்று காட்டுதலால் "கண்டாரிகழ்வனவே காதலன்தான் செய்திடினும், கொண்டானை யல்லாலறியாக் குலமகள் போல்" (பெருமாள் திருமொழி) என்கிறபடியே (4) பதிபத்நீபாவமாகிற உறவு தேறுகின்றது. அதற்கு அடுத்துள்ள மகாரமானது "மந-ஜ்ஞானே" "மந அவபோதநே" என்கிற தாதுக்களிலிருந்து நிஷ்பந்நமாகி ஜ்ஞாதாவான ஆத்மாவைச் சொல்லுதலால் (5) ஜ்ஞாத்ரு ஜ்ஞேய பாவமென்கிற உறவு தேறிற்று. எம்பெருமான் அறியப்படுமவன், ஆத்மா அறிகின்றவன் என்றவாறு. "ஒண்தாமரையாள் கேள்வனொருவனையே நோக்கு முணர்வு" என்கிற பொய்கையார் பாசுரம் இங்கு அநுஸந்தேயம்.

## நம:பதத்தினால் தேறு முறவு ஒன்று.

அதற்குப்பிறகு உள்ள நம: பதத்தினால், தன்னை ரக்ஷித்துக்கொள்வதில் தனக்கு எவ்விதமான உரிமையும் இல்லையென்று காட்டுகிறமுகத்தினால் ஆத்மவர்க்கமெல்லாம் எம்பெருமானுடைய ஸொத்து என்று காட்டுதலால் (6) ஸ்வஸ்வாமி பாவம் என்கிற வுறவு தேறிற்று. ஸொத்தை ரக்ஷிக்குமுரிமை ஸ்வாமிக்கே யன்றோவுள்ளது.

## நாராயணாயவில் தேறு முறவுகள் மூன்று. (ஆக 9.)

இனி நாராயண பதத்தை யெடுத்துக்கொண்டால் இதற்குத் தத்புருஷ ஸமாஸமென்றும் பஹுவ்ரீஹி ஸமாஸமென்றும் இருவகையான வ்யுத்பத்தி மார்க்கங்கள் கொள்ளப்பட்டு, நாரபதார்த்தமான ஸகல வஸ்துக்களுக்கும் எம்பெருமான் ஆதாரமென்றும், அந்த ஸகல வஸ்துக்களையும் தான் ஆதாரமாகவுடையவனென்றும் தெரிந்துகொள்ளுகிறோம். ஆதலால் நாராணும் அயநம் என்கிற தத்புருஷனால் (7) ஆதாராதேயபாவமென்கிற உறவு தேறுகின்றது. நாரா: அயநம் யஸ்ய ஸ: என்கிற பஹுவ்ரீஹியால் (8) சரீரசரீரி பாவமென்கிறவுறவு தேறுகின்றது. நாரங்கள் பகவானிடத்திலே யிருக்கின்றன என்பது தத்புருஷ ஸித்தம். நாரங்களிலே பகவானுளன் என்பது பஹுவ்ரீஹி ஸித்தம். அவற்றிலே இவனிருப்பதாவது அவற்றை உடலாகக்கொண்டு தான் அவற்றுக்கு உயிராக இருப்

பதேயாதலால் இதனால் சரீராத்மபாவம் ஸித்தித்ததென்னக் குறையில்லை. இனி அந்த நாராயண பதத்தின் மீதுள்ள சதுர்த்தீவிபக்தியானது, காகாக்ஷிந்யாயத் தாலே தன்னிடத்திலும் அந்வயிக்கின்ற நமஸ்ஸினால் பரிஷ்காரம் பெற்று, நாராயணனுக்குச் செய்யப்படுகின்ற கைங்கரியத்தின் போகமும் அவனுக்கேயன்றி இந்த ஜீவனுக்கில்லையென்று நிஷ்கர்ஷித்துக் காட்டுதலால் (9) போக்த்ரு போக்ய பாவம் என்கிற உறவைத் தெரிவிக்கின்றது எம்பெருமான் போக்தா, ஜீவாத்மா போக்யன் என்றவாறு. ஜீவாத்மாவை போக்தாவாகவும் எம்பெருமானை போக்யனாகவும் கொள்வதும் ஒருபுடையுண்டெனினும் திருமந்திரத்தில் வடிக்கட்டின பொருள் முந்துறப் பணித்ததேயாகும். ஆகத் திருமந்திரத்தினால் நவவித ஸம்பந்தங்கள் தெரியவந்தன. இவற்றைச் சிந்தையில் பதிய வைத்துக்கொள்வதற்காக *பிதா ச ரக்ஷகச் சேஷீ பர்த்தா ஜ்ஞேயோ ரமாபதி:. ஸ்வாம்யாதாரோ மமாத்மா ச போக்தா சாத்யமநூதித:." என்கிற ச்லோகத்தைப் பெரியார் காட்டியுள்ளார்.

இந்த நவவித ஸம்பந்தங்களையும் நாம் உணரப்பெறாவிடினும் "அவன் சேஷி, நாம் சேஷபூதர்" என்று இத்தனையேனும் அறிய ப்ராப்தம். இவ்வளவையே எம்பெருமான் எதிர்பார்த்திரா நின்றான். ... ... ... *

---

## அர்த்தபஞ்சகத்தில் ஸ்வஸ்வரூபம்.

ஸகல சாஸ்த்ரங்களாலும் நாம் அறியவேண்டிய பொருள்கள் ஐந்தேயாகும். அவையே அர்த்த பஞ்சகம் என்று ப்ரஸித்தமாக வழங்கப்பெறுகின்றன. (1) பரமாத்மாவின் ஸ்வரூபம். (2) ஜீவாத்மாவின் ஸ்வரூபம். (3) உபாயஸ்வரூபம். (4) விரோதிஸ்வரூபம். (5) புருஷார்த்த ஸ்வரூபம் என்கிற இவையே அர்த்தபஞ்சகமாம். இவற்றுள் ஜீவாத்ம ஸ்வரூபமே ஸ்வஸ்வரூபமெனப்படுகின்றது. நம்முடைய பூருவாசார்யர்களுக்குப் பரமநிதியாக விளங்கின இதிஹாஸச்ரேஷ்டமான ஸ்ரீ ராமாயணத்தில் தேறுகின்ற முறையைக் கொண்டு ஸ்வஸ்வரூபத்தை நாம் தெளிந்துகொள்ளும் வழி காட்டுகிறோம். சேஷத்வமும் பாரதந்த்ரியமும் ஸ்வஸ்வரூபம் என்பது உலகமறிந்ததேயாகும். இவை யிரண்டும் எம்பெருமான் விஷயத்திலும் பாகவதர்களின் விஷயத்திலும் ப்ராப்தம். இவற்றை அனுஷ்டான முகத்தால் காட்டுவதற்காகவே இளையபெருமாளும் பரதாழ்வானும் சத்ருக்நாழ்வானும் அவதரித்தார்கள்.

### சேஷத்வ பாரதந்த்ர்ய நிரூபணம்.

சேஷத்வமாவது என்ன? பாரதந்திரியமாவது என்ன? என்பதை முந்துற முன்னம் தெரிந்துகொள்ளவேணும். "கட்டிப் பொன்போலே சேஷத்வம்; பணிப்பொன் போலே பாரதந்த்ரியம்" என்பர் நம் பூருவாசாரியர்கள். இஷ்டமானபடி உபயோகப்படுவதற்கு உரித்தாயிருக்கும் நிலைமையே கட்டிப்பொன். உபயோகப்படுவதற்கு உரித்தாயிருக்குமளவே யல்லாமல் உபயோகப்பட்டுத் தீருகின்ற நிலைமையே பணிப்பொன். வேலை செய்யப்பட்டு ஒரு பூஷணமாக முடிந்த பொன் பணிப்பொன் எனப்படும். ஆக, யதேஷ்டமாக விநியோகப்படுவதற்கு ஸ்வரூப யோக்யதாமாத்ரம் சேஷத்வமென்றும் அவ்வளவேயன்றிக்கே யதேஷ்டமாக விநியோகப்பட்டுத் தீர்ந்தமை பாரதந்த்ரியமென்றும் சொல்லிற்றாயிற்று.

### லக்ஷ்மண பரதர்களின் ஸ்வரூப நிரூபணம்.

இளையபெருமாளுடையது சேஷத்வம்; பரதாழ்வானுடையது பாரதந்த்ரியம். எங்ஙனேயென்னில்; பெருமாள் பித்ருவாக்ய பரிபாலநார்த்தமாகக் காட்டுக்குப்

புறப்பட விருக்கையில் இளையபெருமாள் தம்மையும் உடனழைத்துக்கொண்டு செல்லும்படி வேண்டினர். அப்போது பெருமாள் "காட்டுக்கு விதியாகச் செல்ல வேண்டிய நிர்ப்பந்தம் எனக்குப்போலே உனக்கு இல்லாமையாலே நீ திருவயோத்தியிலே இருந்து தாய் தந்தையர்க்குப் பணிவிடை செய்துகொண்டு வாழ்வாயாக" என்று நியமித்தருளச் செய்தேயும் இளையபெருமாள் அதற்கு உடன்படாது நிர்ப்பந்தித்துப் பின்தொடர்ந்து அடிமைசெய்தார்.

பரதாழ்வானுவென்னில்; சித்ரகூட பரிஸரத்திலே பெருமாள் பக்கலிலே விடைகொண்டு 'திருவயோத்திமாநகர்க்கு மீண்டெழுந்தருளி மகுடாபிஷேகம் கொண்டருளவேணும்' என்று பலவாறு பிரார்த்தித்தவிடத்திலும் பெருமாள் அதற்கு இசையா தொழியவே பரதாழ்வான் தன்னுடைய பாரதந்த்ரிய ஸ்வரூபத்தை நோக்கி அவர்க்குத் திருவுள்ளமானபடியே நடந்து கொள்வதுதான் நமக்கு உற்றது என்று துணிந்து "அதிரோஹார்ய! பாதாப்யாம் பாதுகே ஹேமபூஷிதே, ஏதேஹி ஸர்வலோகஸ்ய யோகக்ஷேமம் விதாஸ்யத:." என்று பிரார்த்தித்து ஸ்ரீராம பாதுகைக்ளை மஹாப்ரஸாதமாகப் பெற்றுக்கொண்டு "ஆருரோஹ ரதம் ஹ்ருஷ்ட:" என்று மகிழ்ந்து மீண்டனன்.

பெருமாள் பிராட்டியைச் சிறைமீட்டுத் திருவயோத்திக்கு மீண்டெழுந்தருளி மகுடாபிஷேகம் கொண்டருளும்போது, யுவராஜபட்டாபிஷேகம் செய்துகொள்ளும்படி இளைய பெருமாளை நிர்ப்பந்தித்தும் அவர் இசைந்திலர்; பரதாழ்வானை நியமித்தவாறே அவர் இசைந்து போந்தார். ஆக இப்படிப்பட்ட தன்மைகளை நோக்குமிடத்தில் இளையபெருமாளுடைய படி வெறும் சேஷத்வமென்றும், பரதாழ்வானுடைய படி அதனிலும் சிறந்த பாரதந்த்ரியமென்றும் அறியப்படும்.

## ஆஜ்ஞாகைங்கர்யமும் அநுஜ்ஞாகைங்கர்யமும்.

சேஷத்வத்திற்காட்டில் பாரதந்த்ரியமே மிகச் சிறந்ததென்றும் அதுவே திருமந்த்ரத்தில் வடிக்கட்டினதாகத் தேறின ஸ்வரூப யாதாத்மியமென்றும் கூறினேம். சாஸ்த்ரங்களில் ஆஜ்ஞாகைங்கர்யமென்றும் அநுஜ்ஞாகைங்கர்யமென்றும் இருவகைப் பணிவிடைகள் கூறப்படும். ஸ்வாமி நியமித்த கட்டளையை மறுக்காமல் அப்படியே நிறைவேற்றுவது ஆஜ்ஞாகைங்கர்யமென்று சொல்லப்படும். எந்த கைங்கர்யத்தைச் செய்யாமற் போனால் ப்ரத்யவாயம் புகுமோ, அது ஆஜ்ஞாகைங்கர்யமென்று கொள்க. இனி அநுஜ்ஞாகைங்கர்யமாவது, 'செய்யாவிடில் ப்ரத்யவாயம்' என்பதில்லாமல், சேஷியின் முகவிகாஸத்தை விரும்பி அத்தாணிச் சேவகமாகச் செய்யும் கைங்கர்யமாகும். ஆகவே இளையபெருமாள் அநுஜ்ஞாகைங்கர்ய நிஷ்டரென்றும், பரதாழ்வான் ஆஜ்ஞாகைங்கர்ய நிஷ்டரென்றும் கொள்க.

## சத்ருக்நாழ்வான்படி.

எம்பெருமானளவில் அடிமைப்பட்டிருப்பதிலுங் காட்டில் அவனடியார்களான பாகவதோத்தமர்கள் பக்கலில் அடிமைப்பட்டிருப்பதானது இன்னமும் மிகச்சிறந்தது. இது சத்ருக்நாழ்வான் பக்கலிலே காணத்தகும். பாகவதோத்தமனை பரதாழ்வானை யல்லது அறியாதே யிருப்பர் சத்ருக்நாழ்வான். ஸ்ரீவால்மீகிமுனிவர் இவரைப்பற்றிக் கூறுமிடத்தில் "சத்ருக்நோ நித்யசத்ருக்ந:." என்கிறார். நம்முடன் கூடப்பிறந்து நம்மைவிட்டு அகலாதிருக்கும் இந்திரியங்களே நித்ய சத்ருவெனப்படும். சத்ருக்நாழ்வான் தமது இந்திரியங்களைப் பட்டிமேயவொண்ணாதபடி அடக்கி ஆள்பவர் என்ற கருத்துப்பட நித்யசத்ருக்ந: எனப்பட்டது. அவருடைய கருத்தின்படி இந்திரியங்களுக்குப் பட்டிமேய்தலாவது என்னென்னில்; தமக்கு உத்தேச்யமான பரதாழ்வானிடத்தை விட்டுப் பிறிதோரிடத்தில் செல்லுதல் பட்டிமேய்தலாம். ஆகவே அவர் பகவத்விஷயத்தையும் விஷயாந்தரத்தோ

என்கிறபடியே ஆண்களையும் பெண்ணுடையுடுக்கச் செய்யுமதாக இருப்பதனாலும் அதைவிடுவது மிகவும் அரிது. ஆனால் குணக்கடலான பகவத் விஷயத்தை விட வேண்டுவதென்னென்னில்; விடவேணுமென்று சொல்லுகிறதன்று. உலகத்தில் ஒருவஸ்துவிலே ஒருவனுக்கு ப்ரேமமுண்டானால் தத்ஸம்பந்த ஸம்பந்த ஸம்பந்திகள் பக்கலிலும் அந்த ப்ரேமம் பெருகிச் செல்லும்படியைக் காணாநின்றோம். மனைவியினிடத்திலே ஆராத காதல்கொண்ட வொருவன் அந்த மனைவிக்கு யார் யார் உற்றாருறவினரோ அவர்கள் பக்கலிலும் ப்ரேமம் பெருகிச் செல்லப்பெறு கின்றானன்றோ. இஃது ஏன்? என்று யாரை யார் கேட்பது? ப்ரேமத்தின் ப்ரவாஹஸரணி அப்படிப்பட்டது என்றே சொல்லவேணும். அதுபோல பகவானிடத்தில் வைக்கின்ற அன்பு அதிசயித்ததாக இருக்குமாகில் "அடியாரடியார் தம்மடியாரடியார் தமக்கடியாரடியார் தம், அடியாரடியோங்களே" என்றும் "த்வத்ப்ருத்யப்ருத்ய பரிசாரக ப்ருத்ய ப்ருத்ய ப்ருத்யஸ்ய ப்ருத்ய இதி மாம் ஸ்மர லோக நாத!" என்றும் சொல்லுகிறபடியே பகவத் பக்த ஸந்தானங்களிலே அது பெருகிச் சென்று தீரும். அந்த ப்ரேமத்தை ஒருமடை செய்யவேண்டியதான முறைமையில் பகவத் விஷயத்தை உபேக்ஷிக்கும்படியான நிலைமையும் வந்துவிடும்.

எம்பெருமான் தானே அஷ்டவித பக்திகளை அருளிச்செய்யுமிடத்தில் *மத் பக்தஜநவாத்ஸல்யம்* என்று, மூந்துற முன்னம் பாகவதர்கள் பக்கலில் ப்ரேமம் கனத்திருப்பதுவே தன் பக்கலில் பக்தி முதிர்ந்தபடி என்று காட்டுகிறான். ஆகவே பகவச் சேஷத்வத்திற் காட்டிலும் பாகவத சேஷத்வமே சீரியதென்றும், அது, ஸ்ரீராமாயண புருஷர்களில் சத்ருக்நாழ்வானுடைய அநுஷ்டானத்தாலே ஸித்தமென்றும் தேறிற்று.

## ஸ்ரீராமாயணத்தில் பெருமாள் காட்டிய ஸ்வஸ்வரூபம்.

ஸ்ரீராமபிரான் பரமபுருஷனாயிருக்கச்செய்தேயும் மனிசர்களிலே ஒருவனாய் வந்து பிறந்து தன்னுடைய நியாமகத்வம் முதலியவற்றை மறைத்துக்கொண்டு நியாம்யர்களிலே தானும் ஒருவனாக ஆசரித்துக் காட்டினபடியாலே அப்பெருமான் தானும் ஸ்வஸ்வரூபத்தை ஒருவாறு காட்டியேயிருக்கின்றான். பெரியோர் சொல்லிற்றைச் சிறியோர் கேட்பது என்று ஒரு ஸாமாந்ய தர்மமுண்டு; இதுவும் ஆத்மஸ்வரூபத்தில் ஒன்றாகும். இதனை ஸ்ரீராமபிரான் ஸ்வாநுஷ்டாநமுகத்தாலே காட்டியுள்ளான். பெருமாள் செய்த செயல்களைக் கூறுமிடங்களில் வான்மீகி பகவான் *விச்வாமித்ரஸ்ய சாஸநாத்* என்றும் *அகஸ்த்யவசநாத்* என்றும், *பிதுர் வசநநிர்தேசாத்* என்றும் *பரத்வாஜஸ்ய சாஸநாத்* என்றும் இப்படியே பெரியோர்களுடைய நியமனங்களைக் காரணமாகக் கூறியிருத்தல் காணலாம். பெருமாள் மூந்துற முன்னம் தாடகையை வதம் பண்ணினார்; ஸ்த்ரீவதம் பண்ணலாமா? என்று சிலர் தர்மஹாநிசங்கிப்பதற்கு இடமில்லாதபடி, "விச்வாமித்ர முனிவர் நியமிக்கவே பெரியோருடைய நியமனமென்று பெருமாள் செய்தார்" என்று வான்மீகி முனிவர் விளக்கி வைத்தார். இங்ஙனமே மற்றும் கண்டுகொள்வது. ஆகவே, பெருமாள் அனுட்டித்துக் காட்டினது ஸாமாந்யதர்மம். இளையபெருமாள் அனுட்டித்துக் காட்டினது அதனிலும் சிறந்த விசேஷதர்மம். பரதாழ்வான் அனுட்டித்துக் காட்டினது அதனிலும் மிகச் சிறந்த உத்தம தருமம். சத்ருக்நாழ்வானது ஸர்வோத்தமம்.

## கைங்கரியத்தின் வகைகள்.

கைங்கர்யத்தில் ஊற்றமுற்றிருப்பதே ஆத்மாவுக்கு மிக முக்கியமாகும். மாநஸிகம், வாசிகம், காயிகம் என்று கைங்கரியம் மூவகைப்படும். இவற்றுள் காயிக கைங்கரியமே மிகவும் சிறப்புப் பெறும். எந்த வஸ்துவிலே நாம் அதிகமான ப்ரேமம் பாராட்டுகின்றோமோ அந்த வஸ்துவைக்கொண்டு கைங்கரியம் செய்வ

தன்றே எம்பெருமானுக்கு உகப்பை விளைக்கும். நாம் நம்முடைய உடலில் எவ்வளவு ப்ரேமம் பாராட்டிவருகின்றோமென்பது ஒவ்வொருவர்க்கும் தெரிந்ததேயாம். பணத்தைக் காட்டிலும் நாம் உடலிலே அதிகமான பற்று வைத்திருக்கிறோம். ராஜஸ்தானத்தில் ஒரு குற்றம் செய்ததற்காகத் தண்டனை விதிக்கப்படும்போது "ஒருநாள் சிறைவாஸம்; அல்லது ஆயிரம்ரூபாய் அபராதம் செலுத்துதல்" என்றால் சரீரத்திலுள்ள அன்பினால், அவ்வுடலுக்குக்கஷ்டம் தருவதான சிறைவாஸத்தை வெறுத்துப் பணத்தையே செலுத்தப் பார்க்கின்றவர்கள் பணத்தைவிட உடலிலேயே அதிகமான அன்புபாராட்டியிருக்கிறார்களென்பது எளிதாகத் தெரியவரும். ஆகவே, நாம் பணத்தைக்கொண்டு கைங்கரியம் செய்வதிற் காட்டிலும் மிக விருப்பமான உடலைக்கொண்டு கைங்கரியம் செய்வதே உத்தமமாகும்.

## இளையபெருமாளுடைய கைங்கர்யப்ரகாரம்.

இதுவும் இளையபெருமாளுடைய அனுஷ்டானத்தாலே ஸித்தம். இவர் "பவாம்ஸ்து ஸஹ வைதேஹ்யா கிரிஸாநுஷு ரம்ஸ்யதே, அஹம் ஸர்வம் கரிஷ்யாமி ஜாக்ரதஃ ஸ்வபதச் ச தே." என்று விண்ணப்பம்செய்து அப்படியே ஒழிவில் காலமெல்லாமுடனாய் மன்னி வழுவிலாவடிமைசெய்து ஸ்வரூபம் நிறம்பெற்றார். இதைப்பற்றி ஸ்ரீவசநபூஷணத்தில் அருளிச்செய்யுமிடத்து "பசியராயிருப்பார் அட்டசோறு முண்ணவேணும் அடுகிறசோறு முண்ணவேணும் என்னுமாபோலே காட்டுக்குப் போகிறபோது இளையபெருமாள் பிரிவில் தரியாமையை முன்னிட்டு அடிமைசெய்யவேணும், எல்லாவடிமையும் செய்யவேணும், ஏவிக் கொள்ளவும் வேணுமென்றார்; படைவீட்டில் புகுந்தபின்பு காட்டில் தனியிடத்தில் ஸ்வயம்பாகத்திலே வயிற்றைப் பெருக்கினபடியாலே ஒப்பூணுண்ணமாட்டாதே ஒரு திருக்கையாலே திருவெண்கொற்றக் குடையையும் ஒரு திருக்கையாலே திருவெண்சாமரத்தையும் தரித்து அடிமை செய்தார்" என்றருளியுள்ள திவ்யஸூக்திகளும் அவ்விடத்து மணவாளமாமுனிகளின் வியாக்கியான ஸ்ரீ ஸூக்திகளும் ஸேவிக்கத்தக்கன.

## அர்த்த பஞ்சகத்தில் பரஸ்வரூப நிரூபணம்.

ஸகலஜகத்காரணபூதனாய், ஸர்வலோகரக்ஷகனாய், ஸர்வசேஷியாய், ஸர்வஸ்வாமியாய், ஸர்வாதாரபூதனாய், ஸகலசேதநாசேதந சரீரகனாய், அகிலஹேய ப்ரத்யநீக கல்யாண குணகண நிலயனாய், உபயவிபூதிநாதனாய், லக்ஷ்மீபதியாயிருப்பன் பரமபுருஷன். மேலே குறிக்கப்பட்ட விசேஷணங்களில் ஒவ்வொன்றிலும் உட்புகுந்து தெரிந்துகொள்வதே பரஸ்வரூபஜ்ஞானமாகும். அவ்வளவு விஸ்தரத்தை இங்கு வைத்துக்கொள்ளாமல் முக்கியமாகச் சில விஷயங்களை நிரூபிக்கிறோம்.

## பரத்வாதி பஞ்சக ப்ரதர்சநம்.

எம்பெருமானுடைய ஸ்வரூபம் பரம் வ்யூஹம் விபவம் அந்தர்யாமி அர்ச்சாவதாரம் என்று ஐவகைப்பட்டிருக்கும். நம்மாழ்வார் *விண்மீதிருப்பாய் மலைமேல் நிற்பாய் கடல்சேர்ப்பாய் மண்மீதுழல்வாய் இவற்றுளெங்கும் மறைந்துறைவாய்* என்ற பாசுரத்தினால் இந்த ஐவகைகளையும் நிரூபித்துக்காட்டியருளினார், விண்மீதிருப்பாய் என்றது பரத்வம்; கடல் சேர்ப்பாய் என்றது வியூஹம்; மண்மீதுழல்வாய் என்றது, ஸ்ரீராமக்ருஷ்ணாத்யவதார ரூபமான விபவம்; இவற்றுளெங்கும் மறைந்துறைவாய் என்றது அந்தர்யாமித்வம்: மலைமேல் நிற்பாய் என்றது அர்ச்சாவதாரம். இவ்வைந்து நிலைகள் விஷ்வக்ஸேந ஸம்ஹிதையிலே *மம ப்ரகாரா: பஞ்சேதி ப்ராஹுர் வேதாந்தபாரகா:, பரோ வ்யூஹச்ச விபவோ நியந்தா ஸர்வதேஹிநாம். அர்ச்சாவதாரச் ச ததா தயாளு: புருஷாக்ருதி:, இத்யேவம் பஞ்சதா ப்ராஹுர் மாம் வேதாந்தவிதோ ஜநா:* என்று சொல்லப்பட்டது.

இவற்றுள் பரத்வமாவ தென்னென்னில்: *நலமந்தமில்லதோர் நாடு* என்னப்பட்ட நித்யவிபூதியிலே நித்யர்க்கும் முக்தர்க்கும் போக்யனுய்க் கொண்டு எழுந்தருளியிருக்கு மிருப்பு. அந்தத் திருநாட்டின் வளத்தை எம்பெருமானருளிச் செய்த ஸ்ரீ வைகுண்டகத்யத்தினுலும் கூரத்தாழ்வானருளிச் செய்த வைகுண்ட ஸ்தவத்தில் *இச்சா விஹார விதயே விஹிதாங்யபூமி* என்கிற (40) ச்லோகத்தில் உத்தரார்த்தம் தொடங்கி ஐந்தாறு ச்லோகங்களினுலும் பட்டருளிச்செய்த ஸ்ரீ குணரத்ந கோசத்தில் *யத் தூரே மநஸோ யதேவ தமஸ: பாரே யதத்யத்புதம் யத் காலாதபசேலிமம் ஸுரபுரீ யத் கச்சதோ துர்கதி:, ஸாயுஜ்யஸ்ய யதேவ ஸூதிரதவா யத் துர்க்ரஹம் மத்கிராம் தத் விஷ்ணோ: பரமம் பதம்* என்கிற ச்லோகத்தினுலும் [இவற்றுக்கு அடியேனுடைய விரிவுரைகளினுலும்] அறிக. ஸம்ஸாரத்தில் நின்றும் விடுபட்டு ஸ்வரூபாவிர்ப்பாவம் பெற்று பகவதநுபவ கைங்கர்யமே போது போக்காக இருப்பவர்கள் முக்தரெனப் படுவர். கருமம் காரணமாக ஒரு நாளும் ஸம்ஸார மண்டலத்தில் காலை வையாத அனந்த கருட விஷ்வக்ஸேநாதிகள் நித்யரெனப்படுவர். ஆக இப்படிப்பட்ட நித்ய முக்தர்களால் ஸேவிக்கப்படா நின்று கொண்டு பரமபதத்திலே எழுந்தருளியிருக்கு மிருப்பு பரத்வம்.

இனி வ்யூஹமாவது—படைத்தல் காத்தல் அழித்தலாகிற ஸ்ருஷ்டிஸ்திதி ஸம்ஹாரங்களை நிர்வஹிப்பதற்காகவும், புபுக்ஷுக்களான ஸம்ஸாரிகளுக்கு இஷ்டப்ராப்தியையும் அநிஷ்ட நிவ்ருத்தியையும் பண்ணிக் கொடுத்து அவர்களை ரக்ஷிப்பதற்காகவும். முமுக்ஷுக்களாய் உபாஸிக்குமவர்களுக்கு ஸம்ஸாரநிவ்ருத்தி பூர்வகமாகத் தன்னை வந்தடையும்படியான அநுக்ரஹத்தைப் பண்ணுவதற்காகவும் ஸங்கர்ஷண ப்ரத்யும்ந அநிருத்தர்களாய்க் கொண்டு திருப்பாற்கடலில் நிற்கும் நிலை. வாஸுதேவரையும் கூட்டி சதுர்வித வ்யூஹமென்று சொல்லுவதுண்டு.

இனி விபவமாவது இதரஸஜாதீயமாய்க் கொண்டு ஆவிர்ப்பவிக்கை. மத்ஸ்ய கூர்மவராஹ ராமக்ருஷ்ணுத்யவதாரங்களையே விபவாவதாரமென்பது. இது ஆவேசாவதார மென்றும் ஸாக்ஷாதவதாரமென்றும் இருவகைப்பட்டு முறையே கௌணமென்றும் முக்க்யமென்றும் வழங்கப்பெறும். சிறிது தாழ்வானது கௌணமெனப்படும். ச்ரேஷ்டமானது முக்க்யமெனப்படும். ஆவேசமானது ஸ்வரூபாவேசமென்றும் சக்தியாவேச மென்றும் இருபடிப்பட்டிருக்கும். தன்னுடைய அஸாதாரண ரூபத்தாலே ஆவேசிப்பது ஸ்வரூபாவேசமாகும். பரசுராமாதிகளான சேதநருடைய சரீரங்களிலே தன்னுடைய அஸாதாரண விக்ரஹத்தோடே ஆவேசித்து நிற்கை இது. சக்தியாவேசமாவது - காரியம் நடைபெற வேண்டிய காலத்தில் மட்டும் பிரமன் சிவன் முதலான சேதநர் பக்கலிலே சக்தி மாத்திரங்கொண்டு ஸ்புரித்து நிற்கையாம். இத்தகைய விபவாவதாரங்கள் எண்ணித் தலைக்கட்டப் போகாதபடி அபரிமிதங்களாயிருக்கும். ஆனது பற்றியே *எந்நின்ற யோனியுமாய்ப் பிறந்தாயிமையோர் தலைவா!* என்றாராழ்வார்.

இனி, அந்தர்யாமித்வமாவது—*சாஸ்தா விஷ்ணுரசேஷஸ்ய ஜகதோ யோ ஹ்ருதி ஸ்தித:* இத்யாதிகளிற் சொல்லுகிறபடியே உள்ளே ப்ரவேசித்து ஸகல ப்ரவ்ருத்திகளுக்கும் நியாமகனுயிருக்குமிருப்பு. இந்த அந்தர் வ்யாப்தியில் சில பக்ஷ பேதங்களுண்டு: அவையெல்லாம் நம்முடைய ஸத்ஸம்ப்ரதாயார்த்த ஸாரநிதியிலே பூர்வபக்ஷ ஸித்தாந்த விஸ்தரங்களுடன் காணத் தக்கன.

அர்ச்சாவதாரமாவது—கோவில்களிலும் க்ருஹங்களிலும் எழுந்தருளி நிற்கும் நிலை. ஒரு ப்ரதிமையிலே எழுந்தருளியிருக்கு மிருப்பு அர்ச்சாவதாரமென்கை.

## வில்லிவாக்கம் திருப்பாவை ஸதஸ்ஸு.

மார்கழிமீ 27 ஆம் தேதியன்று (11—1—59ல்) வில்லிவாக்கம் ஸ்ரீ ஸௌம்யதாமோதரப் பெருமாள் ஸந்நிதி மஹாமண்டபத்தில் திருப்பாவை மகாநாடு கூடிற்று. இதைப்பற்றி நாம் நமது வைதிகமநோஹரா வென்னும் ஸம்ஸ்க்ருத மாஸிக பத்ரிகையில் (ந 102ல்) விரிவாக எழுதி வெளியிட்டிருக்கிறோம். பண்டிதர்கள் அதைக்கொண்டு செய்திகளைத் தெரிந்துகொள்வது. வடமொழியில் பரிசயமில்லாதவர்கள் அவசியம் அதைத் தெரிந்துகொள்ள விரும்பினால் பண்டிதர்களைக் கொண்டே தெரிந்துகொள்ளக் கடவர்கள். ... ... ... *

## ஒரு சோக வார்த்தை.

ஸ்ரீ பெரும்பூதூருக்குத் திலகமாக விளங்கின ஸ்ரீ உ வே. ஸுந்தரராசாரியர் 17—1—59ல் ஆசாரியன் திருவடி சேர்ந்தாரென்பதை யெழுதக் கை நடுங்குகிறது. இவரை யறியாதவர்கள் திவ்ய தேசங்களில் ஒருவருமில்லை. இளமையிலேயே சிறந்த வைதிக யோக்யதை ஸம்பாதித்தவர். ஸ்வாமி ஸந்நிதியில் நியதமுமத் தாணிச் சேவகம் செய்து வாழ்ந்தவர். சென்னையில் பிரபல அட்வகேட்டாக விளங்கும் ஸ்ரீ உ வே. S. ராமாநுஜாசார்ய ஸ்வாமியின் திருத்தம்பியாரிவர். நமக்கு வடநாட்டுத் திருப்பதியாத்திரைகளில் வலக்கை போன்றிருந்தவர். நாற்பது பிராயமுள்ள இவருடைய அகால வியோகத்திற்கு வருந்தாத ஸ்ரீவைஷ்ணவரில்லை. எம்பெருமானுடைய விபரீதஸங்கல்பத்திற்கு நாம் என்செய்ய வல்லோம்.

---

## ஸ்ரீராமாநுஜமிஷன் பிரசாரம்.

சென்னை க்ரௌண்டாக்கீஸ் ப்ரொப்ரைடரும் சிறந்த தார்மிகருமான ஸ்ரீமான் M. V. நரசிம்முலு நாயுடு அவர்கள் விசிஷ்டாத்வைத ஸித்தாந்தக் கோட்பாடுகளை தேசமெங்கும் பிரசாரம் செய்வதற்காக சென்னையில் ஸ்ரீ ராமாநுஜ மிஷன் ஸ்தாபித்து அதன் சார்பாகப் பல தலங்களில் தகுந்த பண்டிதர்களைக் கொண்டு பிரசாரங்களை விசேஷமாகச் செய்து வருகிறாரென்பது பல பத்திரிகைகளினால் பிரசித்தம். பலர் நேர்முகமான அநுபவங்களினாலும் இதையறிந்திருப்பர்கள். ஸ்ரீமான் நாயுடு அவர்கள் நேற்று மார்கழி மாதத்தில் ஸ்ரீ ரங்கம், ஸ்ரீவில்லிபுத்தூர், ஆழ்வார் திருநகரி, தென்திருப்பேரை, திருநெல்வேலி, மதுரை முதலான பலவிடங்களில் தாமே நேராக ஸொந்த காரில் ஸஞ்சாரம் செய்து ஒவ்வோரிடத்திலும் பிரமுகர்களை முன்னிட்டு மஹாசபை கூட்டி விசேஷ சொற்பொழிவுகளை நடத்தி அற்புதமான முறையில் மதப்பிரசாரம் செய்துவந்தார். ஆங்காங்குச் சில தீர்மானங்களும் நிறைவேற்றப்பட்டு அவை அச்சாகி வெளிவந்திருக்கின்றன. ஸ்ரீமான் நாயுடு அவர்களின் ஊக்கமும் முயற்சியும் மிகவும் போற்றத்தக்கவை. இவர் தாமாகவே உபந்யாஸங்களும் செய்ய வல்லவராதலால் இவருடைய முயற்சி மிகவும் சோபித்து வருகிறது.

ஸ்ரீ வில்லிபுத்தூரில் ஆண்டாள் சன்னிதியில் 11—1—'59ல் (ஒன்பதாமாண்டு) திருப்பாவை திருவெம்பாவை மகாநாடு நடைபெற்றது. அதற்குத் தலைவராக ஏற்பாடு செய்யப்பட்டிருந்த ஒரு பெரியார் அசௌகரியத்தால் வராமற்போக, நம் நாயுடு அவர்களின் தலைமையில் அக்கூட்டம் நடத்தப்பட்டது. இவர் தமது முடிவுரையில் திருப்பாவையோடுகூடத் திருவெம்பாவையைச் சேர்த்து மகாநாடு நடத்துவது தவறென்றும், அதிலும் ஆண்டாள் ஸந்நிதியில் நடத்துவது மிகத் தவறென்றும், திருப்பாவை மகாநாட்டைத் தனியே நடத்துவதுதான் உசிதமென்றும் பேசினார். கோவில் அதிகாரிகள் இதை ஆமோதித்து இனி அப்படியே நடத்துவதாக வுறுதிகூறி நாயுடு அவர்களையும் விசேஷமாகச் சிறப்பித்தார்கள். இவருடைய பெருமை மேன்மேலும் ஓங்கி வளருமாக.

## அடியேனுடைய சிறு ஸஞ்சாரச் செய்திகள்.

மதுரைமாநகரில் உபய வேதாந்த ப்ரகடந ஸபையின் சார்பாக நான்காவது வருஷக் கொண்டாட்டம் நிகழும் ஜனவரிமீ 18, 19 தேதிகளில் மதுரை கூடலழகப் பெருமாள் ஸன்னிதியில் வெகு சிறப்பாக நடைபெற்றது. அதற்காக நமக்கு நிர்ப்பந்தமான ஆஹ்வானம் கிடைத்ததனால் மதுரைக்குச் சென்றிருந்தோம். ஸ்ரீவைஷ்ணவஸுதர்சந பத்திரிகையின் ஆசிரியரான ஸ்ரீ உவே. S. கிருஷ்ண ஸ்வாமி ஐயங்கார் அட்வகேட் அவர்களும் முதல்நாள் ஸபையை யலங்கரித்து ஸ்ரீமஹாவிஷ்ணு பரத்வத்தைப் பற்றிச் சிறந்ததோருபந்யாஸம் நிகழ்த்திச் சென்றார்கள். முதல்நாளில் உபயவேதாந்தமென்பது பற்றியும், இரண்டாநாளில் பகவத் ராமாநுஜதர்சநமென்பது பற்றியும் நம்முடைய உபந்யாஸம் நடைபெற்றது. ஸ்ரீமதுபயவே. ஸ்ரீபெரும்பூதூர் ஆஸுரி நரஸிம்ஹாசாரியர் ஸ்வாமியும் இரண்டு நாளும் ஸபையை அலங்கரித்திருந்து மங்களா சாஸனச் சொற்பொழிவும் சிறிது நடத்தினர். இந்த ஸபையின் நிரந்தர உபந்யாஸகரான ஸ்ரீமான். G. R. வெங்கடாசாரியவர்கள் பரம புருஷார்த்த லக்ஷணமோக்ஷ மென்பதுபற்றி உபந்யஸித்தார். அதுகேட்டு நாம் உகந்து ஸம்ப்ரதாயவாசஸ்பதீ யென்கிற விருதை அவர்க்கு அளித்தோம். இந்த ஸபை நம்முடைய ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாயத்திற்கு முன்னேற்றமான காரியங்களைச் செவ்வனே செய்து வருவதால் இது மேன்மேலும் அபிவிருத்தியடைந்து விளங்கவேணுமென்று ஆசாஸித்தோம். மிக விசாலமான கூடலழகப் பெருமாள் ஸன்னிதி கொள்ளாத ஸ்ரீவைஷ்ணவஜனத்திரள் *பொலிக பொலிக வென்று மங்களாசாஸனம் பண்ணத்தக்கதாயிருந்தது.

மதுரையிலேயே ஸத்ஸம்ப்ரதாய ஸபை யென்பதும் இருபத்தைந்து ஸம்வத்ஸரமாக விளங்கி வருகின்றது. இந்த ஸபையின் மூலமாகவும் ஸ்ரீவசந பூஷண ஸாரமென்பதுபற்றி 19—1—59 காலை ஒரு உபந்யாஸம் நிகழ்த்தினோம். திருமாலிருஞ்சோலை, திருமோகூர், திருக்கோட்டியூர், திருமெய்யம் ஆக நான்கு திவ்ய தேசங்களையும் 20—1—59ல் காலையிலும் மாலையிலும் ஸேவித்துக் கொண்டு அன்றிரவே திருவரங்கம் பெரிய கோயில் வந்து சேரலாயிற்று.

## — மதுரையில் விசேஷச் செய்தி —

[ ஸ்ரீரங்கநாத பாதுகா பத்திரிகையைப்பற்றி. ]

அடியேன் மதுரை வந்து சேர்ந்து சில ஆப்தர்களுடன் வார்த்தை யாடிக் கொண்டிருந்தபோது ஒரு ஸஹ்ருதயர் "ஸ்ரீரங்கத்திலிருந்து வெளிவரும் ஸ்ரீரங்கநாத பாதுகா என்னும் பத்ரிகை தேவரீருக்கு வருவதில்லையோ?" என்று கேட்டார். 'அப்படியொரு பத்ரிகை நடக்கிறதென்று இரண்டு வருஷங்களுக்கு முன் தெரியவந்து அதை முறையே அனுப்பி வரும்படி அப்பத்திரிகையின் நிர்வாஹகர்களுக்குத் தெரிவித்தேன்; மறு முறையும் தெரிவித்தேன்; ஒரு ஸஞ்சிகை கூட அனுப்பப்படவில்லை; அதில் ஏதாவது விசேஷமுண்டோ? என்றேன். "தேவரீர் சென்ற வருஷத்தில் வெளியிட்டிருந்த ஸ்ரீ தேசிக ஸஹஸ்ரநாம விமர்ச நூலுக்கு ஸ்ரீமதுராந்தகம் வீர ராகவாசாரியர் ஸ்வாமி ஏகதேசம் பதில் வெளியிட்டிருக்கிறார்; அதில் (தொடரும்) என்று காண்கிறது. சென்ற பங்குனி மாதத்து ஸஞ்சிகையில் (தொடரும்) என்று வெளியிட்டு விட்டு இதுவரை அதன் தொடர்ச்சியாக எதுவும் வெளியிடப்படவில்லை" என்றார். உடனே அந்த பங்குனி மாதத்து ஸஞ்சிகையை வரவழைத்துப் பார்வையிட்டேன். அந்த க்ஷணத்திலேயே அதற்கு ப்ரத்யக்ஷர கண்டனமெழுதி அவ்விடத்திலேயே மறுநாளிலேயே அச்சிட்டேனென்பது இப்பத்ரிகையில் யாவர்க்கும் விசதமாகிறது.

மதுராந்தகர் இப்படியொரு பதிலெழுதி வெளியிட்டிருக்கிறரென்பதை நாம் சில மாதங்களுக்கு முந்தியே கேள்விப்பட்டதுண்டு; நாம் அப்ராமாணிகமான விஷயத்தை ஒருபோதும் எழுதுவது கிடையாதாதலாலும், நாமெழுதிய விஷயங்களுக்கு தேவலோகத்திலிருந்து ஸாக்ஷாத் ப்ருஹஸ்பதியே வந்தாலும் மறுப்பெழுத முடியாதென்கிற திடநம்பிக்கை நமக்கேயன்றிக்கே ஸ்ரீ உ. வே. ஸர் வரதாசார்யஸ்வாமி போன்ற பல ப்ராமாணிக மஹநீயர்களுக்கு முள்ளதாதலாலும். மதுராந்தகர் மறுப்பென்று என்னதானெழுதியிருக்கிறர் பார்ப்போம் என்கிற அபிலாஷை நமக்கு மிக மிகவுண்டானதுண்டு; அதனல் அந்த ஸ்ரீரங்கநாத பாதுகாஸஞ்சிகையைப் பெறுவதற்கு மிக முயன்றதுண்டு. முயற்சிபலிக்கவில்லை. நேற்று கார்த்திகைமாத முடிவில் பகற்பத்து மஹோத்ஸவம் ஸேவிக்க கோயில் விடைகொண்டிருந்தபோது நம்பெருமாள் திருமுன்பே அந்த மதுராந்தகரை ஸந்தித்து ஸம்பாஷிக்க நேர்ந்தது. அப்போது அவரிடத்தில்—

"நான் எது அச்சிட்டாலும் தேவரீர் போல்வாரான வ்யபதிஷ்டஸுஹ்ருந்மணிகளுக்கு என்கையினலேயே புக்போஸ்டு கட்டியனுப்புவது வழக்கமென்பதை தேவரீர் நன்கறிந்திருக்கிறது; என்னுடைய விமர்சத்தைப்பற்றி தேவரீர் ஏதோ அச்சிட்டிருக்கிறதாமே; அதை எனக்கு அனுப்பாமலே யிருப்பது நியாயந்தானு? தேவரீர் பதிலெழுதி வெளியிட்டிருப்பது வாஸ்தவந்தானு?"

என்றேன். "ஏதோ எழுதியிருக்கிறேன்; ஜாகையில் கொணர்ந்து ஸமர்ப்பித்துக் கொள்ளுகிறேன்" என்றுர். பிறகு அவர் ஸன்னிதியில் தென்படுவது மில்லையாயிற்று. *நஞ்சுடைமை தானறிந்து நாகம் கரந்துறையும்* என்றதை நாம் நினைத்து 'மிகமிக அஞ்சி யொளிக்குமதான அப்பத்ரிகையைப் பெறுவதற்கு நாம் முயற்சிசெய்ய எண்ணுவதும் தகாது' என்று முடிவுசெய்து கொண்டோம். ஆனாலும் அந்த பத்ரிகைக்கு எம்பெருமான் ஸங்கல்பித்திருந்த ஆயுள் முற்றிற்றாதலால், நமது முயற்சியின்றியே அது தானகவே நம்மிடம் வந்து சேர்ந்து ஒரு நொடிப்பொழுதில் மாய்ந்தொழிந்தது.

விமர்ச நூலில் நாமெழுதி யிருந்த விஷயங்களில் முப்பதிலொரு பாகத்திற்கும் இவர் பதிலெழுதிற்றிலர். எழுதினவரைக்குங் கூட மிகவும் அஸம்பத்தம் என்பதை நாம் சோம்பாமல் நிரூபித்திருப்பதை நிரூபண நிபுணர்களான பண்டிதர்கள் ஆழ்ந்து நோக்கவேணும். இந்த விசாரங்கள் ஸம்ப்ரதாய பேதத்தில் ஸம்பந்தப்பட்டவையல்ல. ஸாமாந்யமாகப் பண்டிதர்கள் யாவரும் பரிசீலிக்கக் கூடியவை. பாண்டித்யமுள்ள ஸ்மார்த்த மாத்வாதிகளுங்கூட இதைப் பரிசீலிக்கலாம். ஸமீப காலத்தில் திருவுள்ளூரில் ஸ்ரீமத் பரமஹம்ஸ. ஸ்ரீமத ஹோபில மடாதிபதி ஸ்வாமிகளின் ஆஸ்தானத்தில் வித்வத்ஸபை நடைபெறுவதாகத் தெரிகிறது. அந்த ஸபையில் யோக்யர்களான பல வித்வான்கள் கூடுவர்களென்றும் கேள்விப்படுகிறேம். அவர்களெல்லாரும் நம்முடைய ப்ரக்ருத விமர்சனத்தைப் பரிசீலிக்குமாறு நாம் பிரார்த்தித்து அனுப்பியிருக்கிறேம். நமது முந்தின விமர்ச நூலையும் சேர்த்தனுப்பியிருக்கிறேம்.

அந்த விமர்ச நூலில் நாம் கீழ்மை வசவுகளையே வைதிருப்பதாக மதுராந்தகர் எழுதியுள்ளார். ஆர்ஜவத்துடன் ஸமாதானஞ் சொல்லமுடியாத விஷயங்களாயிருந்தால் இவரும் இவரைப்போன்றவர்களும் இப்படித்தானெழுதித் தீரவேண்டுமென்பது உலகமறிந்ததே. உண்மையில் தேசிகஸஹஸ்ரநாம மென்கிற விவாத நூல் பரிஹாஸ்யதைக்கு ப்ரதமலக்ஷ்யமாதலால் அந்த தன்மைக்குச் சேர நாம் பரிஹாஸங்களை ஆங்காங்கு புகுத்தியிருக்கிறே மென்பது உண்மை. அந்த பரிஹாஸங்களும் சாஸ்த்ரஜ்ஞர்கள் உகக்கும்படியானவையே யென்று பல பெரியார் தெரிவித்துள்ளார்கள். அவற்றைக் கீழ்மை வசவுகளாகக் காட்டுவது கீழ் மக்களின் பணியேயல்லது படித்தவர்களின் பணியன்று. ஸ்ரீ உ.வே. உத்தரமேரூர். வாஸுதேவாசார்யரென்பவர் வித்யாபரிச்ரமம் பெற்றவர்; வியாகரணம்

முதலிய சாஸ்த்ரங்களிலும் நல்ல அவகாஹநமுள்ளவர். அவரோ அவரைப் போன்றவர்களோ இவ்வாராய்ச்சியில் தலையிட்டு உலகுக்குத் தத்துவமுணர்த்துதல் நன்று. விவாதாஸ்பதமான தேசிகஸஹஸ்ரநாம ஸ்துதியை அவ்யபதிஷ்டரும் அக்கிலிபிக்கிலிவ்யுத்பத்தியையுடையருமான யஃகச்சநவ்யக்தியே யெழுதியதாக நாம் முடிவு செய்திருந்தோம். மிகவும் வ்யபதிஷ்டரான திருக்குடந்தை கோபால தேசிகனே இதற்குக் கர்த்தாவென்று ஸ்தாபிக்க விவேகியானவொருவரும் முன் வரமாட்டாரென்று மெண்ணியிருந்தோம். அங்ஙனே ஸ்தாபிக்க மதுராந்தகர் வெளிவந்துவிட்டார். இதை ஸ்ரீமதாண்டவன கடாக்ஷித்து ஆதரித்து வெளியிட நியமனம் தந்துவிட்டபடியாலும், ஸ்ரீமுநித்ரயஸம்ப்ரதாயஸ்தராகச் சொல்லப்படுகிறவர்களில் ஒருவரும் இதை ஆக்ஷேபியாமையாலும் இது கோபால தேசிக க்ருதியே யென்று நாமும் நிச்சயிக்க நேர்ந்தது. இவ்வளவு ஆச்சர்யஜ்ஞான நிதியானவொரு மஹாபுருஷரை ஒரு பெருங்கூட்டம் மூலபுருஷராகக் கொண்டிருப்பது மிகவுகக்கத் தக்கதே.

## ஸஞ்சார முடிவில் கோயிற் செய்தி

இனி, கோயில் செய்தியைச் சுருக்கமாக விஜ்ஞாபிக்கிறேன். தை மாசி பங்குனி சித்திரை நான்கு மாதங்களிலும் நம்பெருமாளுக்கு ப்ரஹ்மோத்ஸவம் நடைபெறுவது ஜகத்ப்ரஸித்தம். ப்ரக்ருதம் தையுத்ஸவம் ஸேவிப்பதற்காகவே ஐந்தாநாளிரவு அவ்விடம் சென்று சேர்ந்தேன். ஆறுவது திருநாள் முழுதும் ஒரு க்ஷணம் விடாமல் இருந்து அநுபவிக்கப் பற்றேன். முப்பது நாற்பது வருடங்களுக்குமுன் நான்கு ப்ரஹ்மோத்ஸவங்களையும் ஸம்வத்ஸரபேதந பூர்த்தியாக ஸேவிக்கப்பெற்றதுண்டு. தேவப்பெருமாளுடைய மஹோத்ஸவங்களில் வியாமோஹங் கொண்டிருக்குமடியேனைப் பரவசப்படுத்த வல்லது ஸ்ரீரங்கநாதனுடைய மஹோத்ஸவமே. என்றும் ஒரே சீராக நடைபெற்றுவரும் நம்பெருமாள் மஹோத்ஸவத்தின் சிறப்பை வருணிக்க நாமார்? ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞா வர்த்ததாமபிவர்த்ததாம்* என்றும் *ஸ்ரீமந் ஸ்ரீரங்கச்ரியமநுபத்ரவா மநுதிநம் ஸம்வர்த்தய* என்றும் ஸ்ரீவைஷ்ணவ வுலகம் முழுவதும் முச்சந்தியும் மங்களாசாஸனம் செய்து வருவது பழுதாகுமோ?

கோயிலில் சில ஸஹ்ருதய ஸுஹ்ருந்மணிகளோடு வார்த்தை யாடுகையில் இரண்டு விஷயங்களில் ஸரஸாலாபம் ஏற்பட்டது. (1) *சொன்னால் விரோத மிது வாகிலுஞ் சொல்லுவன் கேண்மினோ* என்கிற திருவாய்மொழிப் பாசுரத்தின் சுவைப் பொருளைப் பற்றின ஸல்லாபம் ஒன்று. (2) திருப்பாவையில் * வையத்து வாழ்வீர்காளில் * செய்யுங் கிரிசைகள் * என்ற விடத்து அடியேனுடைய திவ்யார்த்த தீபிகையுரையிலுள்ள வொரு வாக்கியத்தைப் பற்றின ஸல்லாபம் மற்றொன்று. இவற்றுள் முந்தின விஷயத்தைப்பற்றி அம்ருத லஹரியில் விரிவாக விஜ்ஞாபித்திருக்கிறேன். அது 15—2—59ல் வெளிவரும். பிந்தின விஷயத்தில் இங்குச் சுருக்கமாக விஜ்ஞாபிக்கிறேன்.

நோன்பிலே ஒருப்பட்ட ஆயர்மங்கைகள் * நம் பாவைக்குச் செய்யுங் கிரிசைகள் கேளீரோ* என்று தொடங்கித் தாங்கள் செய்யத் தக்கவற்றையும் விடத்தக்கவற்றையும் ஸங்கல்பிக்கின்றனர் திருப்பாவை யிரண்டாம் பாட்டில். இதை விவரிக்குமிடத்து நாம் நமது தீபிகையில் எழுதியிருப்பதாவது,

"பாற்கடலுள் பையத் துயின்ற பரமனடி பாடுகை, நாட்காலே நீராடுகை, ஐயமும் பிச்சையும் ஆந்தனையும் கைகாட்டுகை—ஆக இம்மூன்றும் செய்யப்படுமவை.நெய்யுண்ணாமை,பாலுண்ணாமை, மையிட்டெழுதாமை,மலரிட்டு முடியாமை, செய்யாதன செய்யாமை, தீக்குறளைசென்றோதாமை—இவை விடப்படுமவை" இங்குத் தோன்றும் அநுபபத்தியை ஒரு ஆப்தர் தெரிவித்தார். அதாவது, நெய்யுண்ணாமை பாலுண்ணாமை முதலானவற்றை விடப்படுமவையாகத் தெரிவித்தால்

நெய்யுண்ணவேணும், பாலுண்ணவேணும், மையிட்டெழுதவேணும், மலரிட்டு முடியவேணும், செய்யாதன செய்யவேணும், தீக்குறளை சென்றோதவேணும்— என்பதாகவன்றோ தேறும். விவக்ஷிதத்திற்கு நேர்விருத்தமாகவன்றோ ஆகிறது. "நெய்யுண்கை, பாலுண்கை .....செய்யாதன செய்கை—இவை விடப்படுமவை" என்றன்றோ எழுதியிருக்கவேண்டும்—என்று. இதற்கு நாம் விடுத்த விடையாவது, நமது தீபிகையில் 'செய்யப்படுமவை' என்றது—கர்த்தவ்ய கோடியில் சேர்ந்தவை என்றபடி. இவ்வண்ணமாகவே 'விடப்படுமவை' என்றது த்யாஜ்ய கோடியில் சேர்ந்தவை என்றபடி. நெய்யுண்ணுமை பாலுண்ணுமை முதலியவைகள் த்யாஜ்ய கோடியில் தானே சேர்ந்தவைகள். நெய்யுண்கையை விட்டால் அதனால் தேறுவ தென்ன? நெய்யுண்ணுமை; பாலுண்கையை விட்டால் அதனால் தேறுவதென்ன? பாலுண்ணுமை. 'நெய்யுண்கை த்யாஜ்யம், பாலுண்கை த்யாஜ்யம்' என்றெழுதி னால் ஸ்வரஸமாக இருக்குமேயென்று சிலர் நினைக்கக் கூடும். மூலப் பாசுரத்தில் 'உண்ணோம் எழுதோம் முடியோம் செய்யோம் ஓதோம்' என்று எதிர்மறை யாகவே நிர்தேசமுள்ளது. அதற்குச் சேர உண்ணுமை எழுதாமை முடியாமை செய்யாமை ஓதாமை என்றெடுத்து இவை த்யாஜ்ய கோடியாகக் கொள்ளப் பட்டவை யென்று எழுதினதில் அநுபபத்தி ஸ்புரிக்கவில்லை. இப்பாசுரத்தில் கர்த்தவ்யமாகத் தேறுகிறவை எவை? த்யாஜ்யமாகத் தேறுகிறவை எவை? என்று கேட்டால் தீபிகையில் நாமெழுதி யிருக்கிறபடியே விடை கூறுவதில் அநுபபத்தியொன்றும் காணமுடியாது. இன்னின்னவற்றைப் பற்றுவோம், இன்னின்னவற்றை விடுவோம் என்கிற ஸங்கல்பமாத்ரமே இப்பாசுரத்திலுள் ளதேயன்றி வேறில்லை. பற்றுமளவால் தேறும் அம்சமும், விடுமளவால் தேறும் அம்சமும் இங்கு வக்தவ்யம். நெய்யுண்கையை விட்டால் தேறுமது நெய்யுண் ணுமைதான். இங்ஙனமே மற்றுங் கண்டுகொள்க.

இதில் ஸாரமாகச் சொல்லுமது கேளீர். ஒரு பெரிய சாஸ்த்ரஜ்ஞர் *முநித்ரயம் நமஸ்க்ருத்ய ததுக்தீ: பரிபாவ்ய ச, வையாகரண ஸித்தாந்த கௌமுதீயம் விரச் யதே*என்றெழுதிவைத்தார்; இதை உலகமெல்லாம் சிந்தனை செய்து வருகிறது. பரிபாவ்ய என்பதற்கு விபரீதமான அர்த்தமேதான் ஸ்வரஸமாக ஸ்ப்புரிக்கிறது. *ததுக்தீநி விபாவ்ய ச* என்று எளிதாக ச்லோகமியற்றி யிருக்கலாமேயென்று நினைப்பார் பலருளர். ஆனாலும் அது நிரவத்யமென்றுதான் வித்வத்கோஷ்டியில் ஸித்தாந்தம். அதற்குள்ள உபபத்திகள் தெரிவிக்கப்பட்டுள்ளன. வக்தாவின் விவக்ஷை தானே முக்கியம். இங்கும் விவக்ஷையைக்கொண்டு தெளியக்கடவது.

நாச்சியார் திருமொழியில் * கருப்பூரம் நாறுமோ* என்கிற ஏழாம்பதிகத்தின் அவதாரிகையிலே (நமது திவ்யார்த்த தீபிகையில்) *க்ருதம் கருதம் பாஹு* என்கிற ஸ்ரீ ராமாயண ச்லோகத்தைப் பெருமாளுடைய வார்த்தையாக வெழுதி ஒரு பதிப்பு வெளிவந்திருக்கின்றது. உண்மையில் இது பிராட்டியின் வார்த்தையே யொழியப் பெருமாளுடைய வார்த்தையன்று. இதைப்பற்றியும் அந்த ஆப்தர்தாமே கேட்க நேர்ந்தது. இது ப்ராமாதிகமே யென்றும், அடுத்த பதிப்புக்களில் இது திருத்த முற்றேயிருக்கிறதென்றும் விடை கூறினோம். ஸுந்தரகாண்டத்தில் (51—18) *ந ஹி தர்மவிருத்தேஷு பஹ்வபாயேஷு கர்மஸு, மூலகாதிஷு ஸஜ்ஜந்தே புத்திமந்தோ பவத்விதா:* என்கிற ச்லோகம் ராவணனை நோக்கித் திருவடி சொல்லுவதாகவே தாளகோசங்களுட்பட ஸ்ரீ ராமாயண ப்ரதிகளெல்லாவற்றிலும் காண்கிறது. திரு வாய்மொழி (7—1—9) *குலமுதலடும் பாட்டின் வியாக்கியானங்களில் இந்த ச்லோகம் பூர்த்தியாக உதாஹரிக்கப்பட்டு "என்றுனிறே மால்யவான் ராவண னுக்கு" என்றருளிச் செய்யப்பட்டுள்ளது. இந்த விபர்யயத்தின் தத்துவமென்ன வென்று காண முடியவில்லை. ஆசாரியர்கள் தவறாக அருளிச் செய்ய ப்ரஸக்தி யில்லை. சோதிக்கவேண்டியவை பலவுள. இது இங்கு ப்ராஸங்கிகமான விஷயம்.

---

ஸ்ரீ:

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.



# ஸ்ரீரங்கநாத பாதுகாஸமீக்ஷா

## அல்லது

# விமர்சபரீக்ஷா விமர்சநம்.



(ஸ்ரீ காஞ்சீ ப்ரதிவாதி ப்யங்கரம் அண்ணங்கராசாரியரால்
18—1—59ல் மதுரையிலெழுதப்பட்டு 19—1—59ல் அவ்விடத்திலேயே
ஹரிஸமய திவாகர அச்சுக்கூடத்தில் அச்சிடுவிக்கப்பட்டது.

---

मधुरान्तकवीररघूद्वहसूर्यभिधानसुहृन्मणिवाग्वितति॒म् ।
मधुरानगरे मधुरैर्वचसां निकरैर्विमृशामि मुदे विदुषाम् ॥

1. சென்ற ஹேவிளம்பியாண்டு தைமாதத்து ஸ்ரீராமாநுஜனில் **ஸ்ரீ தேசிக ஸஹஸ்ரநாம விமர்சனம்** என்னுமோர் நூலை வெளியிட்டிருந்தோமென்பது வித்வான்களின் நினைவிலுள்ளது. அந்நூலுக்கு, சென்ற வருடப் பங்குனிமாதத்து ஸ்ரீரங்கநாத பாதுகாபத்ரிகையில் 'ஸ்ரீ தேசிக நாம விமர்ச பரீக்ஷா' என்னும் பெயரால் ஒரு மறுப்பு வெளிவந்திருப்பதாக இன்று (18–1–59ல்) மதுரைமாநகரில் கண்டோம். ஸ்ரீ. உப. வே. மதுராந்தகம் வீரராகவாச்சாரியர்ஸ்வாமியாலெழுதப்பட்டது இந்த மறுப்பு. இந்த ஸ்வாமி பண்டித கோஷ்டியில் ப்ரஸித்தர். அடியேனுக்கும் பரமஸுஹ்ருந்மணி. அடியேன் வெளியிட்டிருந்த விமர்சநூலில் அந்த ஸ்வாமியும் விடை தரவேண்டிய விஷயங்கள் எடுத்துக் காட்டப்பட்டிருந்தபடியால் அதனை அந்த ஸ்வாமிக்கு முந்துறமுன்னம் அனுப்பி, அத்துடன் ஒரு சிறு முறியும் விடுத்திருந்தேன்—"தேசிக ஸஹஸ்ர நாம விமர்சத்தில் அடியேன் ப்ரவர்த்திக்க நினைத்திலேன்; அந்த ஸஹஸ்ரநாமம் ஸ்ரீ கோபால தேசிகன் ஸாதித்ததாக தேவரீரும் ஸமீப முகவுரையில் எழுதினதைக் கண்டபடியால் விமர்சம் அவச்யமாயிற்று. ஸௌஜந்யத்தோடும் தடஸ்தபுத்தியோடும் கடாக்ஷித்தருளி ஆர்ஜவத்துடன் அபிப்ராயத்தைத் தெரிவித்தருளலாம்" என்று விஜ்ஞாபித்திருந்தேன். ஸ்ரீரங்கம் ஆண்டவனாச்ரமத்திலிருந்து வெளிவரும் ஸ்ரீரங்கநாத பாதுகா என்னும் பத்ரிகையில் அந்த ஸ்வாமி மறுப்பெழுதி [**அதிஸ்வல்ப பாகத்திற்கு மட்டுமே யெழுதி**] வெளியிட்டிருக்கிறார். இது வெளிவந்து பத்துமாதமானதாகத் தெரிகிறது. இதனை அந்த ஸ்வாமி அடியேனுக்கு அனுப்ப வேண்டியது ப்ராப்தமாயிருந்தும் 'நமது மறுப்பு ஸ்வல்பகாலமாவது உயிர்வாழ்ந்திருக்கட்டுமே' என்னுமாசையினால் அனுப்பாமலேயிருந்தார். பத்துமாதம் ஜீவித்திருக்கவேண்டிய பாக்யம் அந்த மறுப்புக்கு இருந்ததுபோலும். அதனால் அது இன்றளவும் நமது கண்ணில்பட்டவில்லை. இன்று மதுரையில் ஒரு ஸதஸ்ஸுக்கு நாம் வர நேர்ந்தது. இவ்விடத்தில் யத்ருச்சயா அதனைக் காண நேர்ந்ததனால் கண்ட அடுத்த க்ஷணத்திலேயே இந்த பரீக்ஷா விமர்சநத்தை யெழுதி முடித்தோம்.

இந்த முன்னுரையைத் தொடர்ந்து விஜ்ஞாபிக்க வேண்டிய விஷயங்கள் முடிவுரையில் காணத் தக்கன, அந்த ஸ்வாமியும் மற்றுமுள்ள வித்வான்களும் இதனை நன்கு விமர்சித்து விரைவில் விடை தரும்படி வேண்டி நிற்கின்றோம். ... ... (முன்னுரை முற்றிற்று.)

**— விம்சத்வர்ஷ பாடத்திருத்த விமர்சம். —**

2. ஸ்ரீ தேசிக ஸஹஸ்ரநாம விமர்சமென்கிற நூலை நாம் எழுதத் தொடங்கினபோது 'இந்நூலை நாம் அவசியம் எழுதவேண்டுமா? தேசிக ஸஹஸ்ரநாம மெழுதியவர் ஒரு பெரிய ஆசார்யராகச் சொல்லப்படுகிறரே. அவர் வாக்கில் அஸம்பத்தமிருப்பதாக நாம் நினைக்கத்தகுமா?' என்கிற விசாரம் மிகவு முண்டாயிற்று. அப்போது **" विंशद्वर्षाधीत सर्वविद्यासन्तति भासुरः—** விம்சத்வர்ஷாதீத ஸர்வவித்யாஸந்ததி பாஸுர:" இத்யாதியான பல ச்லோகங்களைக் கண்டே அந்த ஸஹஸ்ரநாம கர்த்தாவை அவ்யுத்பந்நரென்று நிச்சயித்து, லோகோபகாரார்த்தமாக விமர்ச நூல் எழுதவேண்டியதே யென்று துணிந்து அதை யெழுதத் தொடங்கி முடித்தேன். அந்த விமர்சநூலில் இருபத்தெட்டாவது வாக்யச்ரேணியில் (பாராவில்) அடியேனெழுதியிருப்பதாவது

> "(692) ❊ விம்சத்வர்ஷாதீத ஸர்வவித்யாஸந்ததி பாஸுர: ❊ என்கிறர். த்ரிம்சத், சத்வாரிம்சத், பஞ்சாசத் போலவே **விம்சத்** என்றுமுண்டென்று கொண்ட இவருடைய மேதையை என்னென்பது? காவ்யங்களை மட்டும் வாசித்த சிறு வித்யார்த்தி கூட இங்ஙனே பிரயோகிக்கத் துணியமாட்டானே. பஞ்சம ஸப்தம அஷ்டம நவம தசமாதிபதங்களைக் கண்டு **ஷஷ்டம** மென்று ப்ரயோகிக்கிறவர்களுக்குத் துணைவரான இந்நூலாசிரியரை கோபால தேசிகனென்று கூசாமலெழுதிவைப்பது என்ன ஸாஹஸமோ! ❊ **விம்சத்யப்தே** ❊ என்கிற ஸுப்ரஸித்த ஸங்கல்ப ஸூர்யோதய ஸூக்தியைக்கூட அறியாதவரா கோபாலதேசிக னென்பவர்!" என்று,

3. இதற்கு மதுராந்தகரின் விடை என்னவென்றால், பலபல வருஷங்களுக்குமுன் அச்சிட்ட முதற்பதிப்பிலும் இங்கு அச்சுப்பிழை புகுந்துவிட்டதாகவும்; '**விம்ச வர்ஷாதீத**' என்று கோபாலதேசிகன் ஸாதித்திருந்ததாகவும்; 'விம்சத்வர்ஷ' என்று அச்சுப்பிழையாக விழுந்து விட்டதாகவும், '**விம்ச வர்ஷாதீத**' என்கிற யதாவஸ்தித பாடத்தில் ஒரு அவத்யமும் சொல்லப் போகாதென்பதாகவும், அச்சுப்பிழைகளைப்பற்றிக்கொண்டு அட்டஹாஸம் பண்ணுவதுதான் அண்ணங்கராசார்யருடைய தொழில் என்பதாகவும், அண்ணங்கராசார்யருடைய பதிப்புகளில் ஆயிரக்கணக்கான அச்சுப்பிழைகளும் புத்திப் பிழைகளும் காட்டமுடியு மென்பதாகவும் ...... இப்படியாக ஒருபக்கம் நிரப்பியுள்ளார் மதுராந்தகர். இதைக் காணும்போது நமக்கு ஒன்று நினைவுக்கு வந்தது. (அதாவது) ஸ்ரீராமாயண ப்ரவசநகாரரொருவர் **"தருணௌ ரூபஸம்பந்நௌ"** இத்யாதி ச்லோகத்தை யெடுத்து 'இப்படியன்றோ தாரையநுபவித்தது' என்றாராம். அதைக் கேட்ட மற்றொரு ப்ரவசநகர்த்தா "இவர் ராமாயணம் கற்ற அழகு வெகுநன்றாயிருக்கிறது!, இது அயோத்யா காண்டத்தில் மந்தோதரி சொன்னது என்பதைக் கூட அறியமாட்டாமல் தாரை சொன்னதாகச் சொல்லுகிறவிது வெகு அழகு!" என்றாராம். அதே கதைதானிங்கு.

4. மதுராந்தகர்க்கு இங்கு மருமமுணர்த்துகிறோம். '**விம்சத்வர்ஷ**' என்றிருந்தால் சப்ததோஷம்; '**விம்சவர்ஷ**' என்றாக்கினால் அர்த்ததோஷம். நிரூபிக்கிறோம் கேளீர். 'விம்ச வர்ஷ' என்பதற்கு இருபதாவது வர்ஷத்திலே என்று பொருளாதலால் தேசிகன் பத்தொன்பது பிராயம் வரையில் ஒன்றும் அத்யயனம் செய்யாமலிருந்து இருபதாவது பிராயத்தில்தான் அத்யயனம் செய்தார் என்பதாகப் பொருள் கிடைக்குமேயல்லது 'இருபது பிராயத்திற்குள் ஸகல வித்யைகளையும் அத்யயனம் செய்துவிட்டார்' என்கிற பொருள் தலைகீழாக நின்று

தவம்புரிந்தாலும் கிடைக்காது. ஸ்வாமி தேசிகன் ஸங்கல்பஸூர்யோதயத்தில் அக்ஷரானுப்ராஸத்திற்கும் சேர '**விம்சே வர்ஷே**' என்றருளிச் செய்யலாமாயிருந்தும் அதைவிட்டு '**விம்சத்யப்தே**' என்றருளிச் செய்ததை நாமெடுத்துக் காட்டியிருந்தும் அந்தோ ! தெளிவு பிறக்கவில்லையே.

5. ஒரு பண்டிதர் '**விம்சத்யப்தேஷு**' என்று பஹுவசநாந்தமாகவன்றோ இருக்க வேண்டும் ; அப்படியிராமல் 'விம்சத்யப்தே' என்று ஏகவசநாந்தமாக இருப்பது அபாணிநீயமாகையால் '**விம்சே வர்ஷே**' என்றுதான் ஸ்வாமி திருவாக்கில் வந்த பாடம் — என்றார். மற்றொரு பண்டிதர் — 'விம்சத்யப்தே' என்பதுதான் யுக்தமான பாடம் ; அது ஸமஸ்த பதமன்று ; இரண்டு (வ்யஸ்த) பதங்கள். **விம்சதி** என்பது ஸப்தம்யந்தமான தனிப்பதம். த்ரிம்சதி, சத்வாரிம்சதி, பஞ்சா**சதி** என்று ஸப்தம்யந்த பதங்கள் எப்படி ஸாதுவோ, அப்படியே **விம்**சதி என்கிற ஸப்தம்யந்த பதமும் ஸாதுவே ; ஏவஞ்ச 'விம்சத்' என்கிற சப்தம் உண்டு தான் ; இந்த தேசிகப்ரயோகத்தையநுஸரித்தே கோபால தேசிகன் 'விம்சத்வர்ஷ' என்று ப்ரயோகித்தார் ; இது தேசிக திவ்யஸூக்திக்கு அநுகுணமாதலால் ஒருகாலும் துஷ்டமாகாது என்றார். இப்படிப்பட்ட பண்டிதர்களின் ச்ரேணியில் மதுராந்தகர் தலைவரல்லவோ ! இவர் 'ஐயோ பாவம் பண்டிதர்' என்று பெயர் பெற்றிருப்பது தகும் தகும் தகும் என்கிறார்கள் பலர்.

6. * [illegible] * என்கிற அநுசாஸநத்தைக்கொண்டே ஸ்வாமி **விம்சத்யப்தே** என்று ஏகவசநாந்தமாக ஸமாஹாரம் பண்ணினார். அவதரித்ததுமுதல் இருபது பிராயத்திற்குள் என்றோ, அத்யயந யோக்யதை யுண்டானது முதல் இருபது பிராயத்திற்குள் என்றோ விவக்ஷித்து அருளிச்செய்தபடி. ❋ பக்ஷிதேபி லசுநே ந சாந்தோ ! வ்யாதி: ❋ என்கிற ந்யாயத்திற்கு ஸ்மாரகமாக 'விம்சவர்ஷாதீத' என்று திருத்துகிற மதுராந்தகர் '**விம்சத்யப்தாதீத**' என்று எளிதாகத் திருத்தும்வழி யறிந்திலரந்தோ !. விவாதாஸ்பதமான ஸஹஸ்ரநாமம் அச்சாகி வெளிவந்தபின் எட்டு மாதம் கடந்த பிறகு நாம் விமர்சம் வெளியிட்டிருக்கிறோம். மூலத்தில் அச்சுப்பிழைகள் அநேகமிருப்பதாக நமக்கு விடை கூறுமிவர் முன்னடியாகவே இவையிவை அச்சுப்பிழையென்று லோகோபகாரார்த்தமாக வெளியிட்டிருக்கவேண்டாவா? ஸ்ரீரங்கநாத பாதுகா, ந்ருஸிம்ஹப்ரியா, ஸேவா முதலான பல பத்ரிகைகளுண்டே. கிம் பஹுநா ? இவர் அச்சுப்பிழையென்று சொல்லித் திருத்திக் காட்டும் பாடத்திலும் அநுபபத்தி மலிந்தேயுள்ள தென்பதை நாம் நிரூபித்திருப்பது விவேகிகளின் உள்ளத்துள் ஊறியிருக்கும். ப்ரக்ருதஸ்தலத்தில் ஒரு ஆதாரமுமில்லாமல் கேவலம் ஸாஹஸத்தினால் 'விம்சவர்ஷ' என்று திருத்தினவிவர் 'விம்சத்யப்த' என்று திருத்தியிருந்தாராகில் அது தேசிக ஸ்ரீஸூக்திச் சாயைக்கு ஒத்திருப்பதோடு நமது வாயையும் பூட்டியிருக்கும். அந்தோ ! அந்த பாக்யமில்லையே யிவர்க்கு.

7. இவர் **விம்சவர்ஷாதீத**...என்று பாடத்தை மாற்றி 'இருபதாவது திருநக்ஷத்திரத்தில் அத்யயநம் பூர்த்தி பெற்ற கலைகளனைத்தினாலும் விளங்குமவர் என்பது கருத்து' என்றெழுதுகிறார். உள்ள சொல் தொடையில் இக்கருத்து ஒருகாலும் தேறாது. விவாதக்ரஸ்த ஸஹஸ்ரநாம கர்த்தாவின் ப்ரக்ருதிக்குச் சேர "**विंशवर्षसमाप्ताशे—षविद्याधीति भासुरः**— விம்ச வர்ஷ ஸமாப்தா சே — ஷ வித்யாதீதியாஸுர :" என்று திருத்தினாலொழிய உய்யும் வகையில்லையென்பதை இவரும் இவரைச் சேர்ந்தவர்களும் நன்குணரவேணும். அச்சுப் பிழையாகச் சொல்லி உய்யலாமென்று இவர் நினைக்குமிடங்களிலெல்லாம் இதே கதிதான் ; ஐயமில்லை. இதற்குத் தோள் தீண்டியாக மற்றொன்றும் காட்டுவோம்.

— வையஹிம்ஸாஹ்ரிம்ஸதா விமர்சநம். —

8. விவாத ஸஹஸ்ரநாமத்தில் (183) "வைஹிம்ஸாஹிம்ஸதாஸ்தாப—நீதிஸ-நீதிக:" என்பது ஒரு திருநாமமாகக் காண்கிறது. இதைப்பற்றின நமது விமர்சத்தில் "இங்கே கர்ணுருந்துத விந்யாஸம் மட்டுமன்று; ஏகம் அக்ஷரம் பக்ஷிதம் என்கிற விசேஷமுமுண்டு; அஹிம்ஸதா என்கிற அபசப்தப்ரயோகப்ரபாவமுமுண்டு" என்று எழுதப்பட்டுள்ளது. இதைப் பரீக்ஷிக்கும் மதுராந்தகர் "வைதஹிம்ஸாஹிம்ஸதாஸ்தா—பநீதிஸ-நீதிக:" என்பதாக மூலகோச பாடம் 1940-ஞ்த்தின் பதிப்பில் காண்கிறது" என்று தொடங்கி யெழுதியிருப்பதை விமர்சிப்போம்.

9. இங்கு நாம் மூன்று குற்றங்கள் காட்டியிருந்தோம். (1) செவிக்கினுத சொல் தொடை. (2) ஓரெழுத்து விட்டுப்போனது. (3) அபசப்தப்ரயோகம். ஆக இம்மூன்று குற்றங்களில் ஓரெழுத்து விட்டுப்போனதென்கிற இடைக்குற்றம் மூலகாரருடையதன்று, முத்ராபகருடையது. (வைஹிம்ஸா) என்றவிடத்தில் 'वैधहिंसा' என்பது பாடம் என்று காட்டியிருப்பது அஜ்ஞாதஜ்ஞாபநமாகாது. இது விஷயமேயன்று. செவிக்கினுத சொல்தொடையென்கிற முதல் குற்றம் மூலத்திலுள்ள ஆயிரம் திருநாமங்களில் 750 திருநாமங்களில் பரிஹரிக்க வொண்ணுதது. இதைப்பற்றிப் பிறகு பேசுவோம். அபசப்தப்ரயோகமென்கிற மூன்ருவது குற்றத்தைப் பரிஹரிக்க இவர் வெகு பரிச்ரமப்படுகிருர்.. கோரமாதவம் செய்தாலும் நாம் காட்டுமவத்யம் பரிஹரிக்கப் போகாதென்பதையும், உலகத்திலுள்ள ஸகல பண்டிதர்களுங் கூடிப் பரிச்ரமப்பட்டாலும் பரிஹரிக்கப் போகாதென்பதையும் இவர் நன்கறிந்திருக்கச் செய்தேயும் அந்தோ! ❊ वृषणस्य वृथाश्रमः ❊ என்னும்படி வீணுக ச்ரமப்படுகிருர். நாம் அபசப்தமென்று சொல்லிக் கழித்ததை ஸ-சப்தமென்று ஸாதிக்க இவரா அதிகாரி? நமது விமர்ச நூலின் அட்டைமேல் வைகுண்டவாஸியான ஸ்ரீமத் கபிஸ்தலம் ஸ்வாமியின் திருவுருவப் படம் வெளியிடப்பட்டிருப்பது எதற்காகவென்பதை அந்தோ! இவர் அறியப் பெற்றிலர். அநேக சாஸ்த்ர வித்வத்வரிஷ்டரான அந்த மஹாஸ்வாமி நேராகவெழுந்தருளினுலுங்கூட நமது விமர்சத்தில் வாய்திறக்க கில்லார் என்பதைக் காட்டுதற்கேயன்ரே அவரை முகப்பில் திகழச் செய்தது. அது நிற்க.

10. இங்கு இவர் என்ன ஸமர்த்தநம் காட்டுகிருரென்பதை முன்னம் விளக்கி அது காசுக்குமுதவா தென்பதை உடனே விவரிப்போம். இடையில் எழுதுகிருரிவர்— "அஹிம்ஸா என்கிற அபசப்தப்ரயோக ப்ரபாவமுமுண்டு—என்பது இவருடைய [அண்ணங்கராசார்யருடைய] அபசப்த ப்ரயோக ப்ரபாவம்" என்று. அந்தோ! இந்த மருள்பெருக்குக்கு என் செய்வது? அஹிம்ஸா என்பதை அபசப்தமென்று நாம் தூஷித்திருப்பதாக வைத்து தூஷிக்கிருரிவர். அஹிம்ஸா என்கிற பதம் மூலத்திலுமில்லையே. பிறர்க்குப் பொருள்படாதபடியும் கைபோனபடியுமெழுதுகிருரிவர். "அஹிம்ஸதா என்பதற்கு அஹிம்ஸா என்று விழுந்திட்டது அச்சுப்பிழை" யென்பர். இவர் அச்சிடுவது நாலரை காகிதம். அதில் நானூறு அச்சுப்பிழைகள். எழுதுவதற்கும் அச்சுத்தாள் திருத்துவதற்கும் பலபலர் இவர்க்குத் துணைவர்கள். நம்முடைய வெளியீடுகளோ மூன்று லக்ஷம் காகிதங்களுக்கு மேற்பட்டவை. இது அதிசயோக்தியாக எழுதுவதன்று; எண்ணிப் பார்த்தால் நாலைந்து லக்ஷமுமிருக்கும். அவற்றிலுள்ள அச்சுப் பிழைகளைத் தேடிப்பிடிக்க பரத்வாஜமஹர்ஷியைப் போலே மூன்று ஆயுள்பெறவேணுமிவர். எந்த இடத்தைத் தொட்டாலும் அச்சுப்பிழையும் அசட்டுப் பிழையுந் தவிரவேறில்லாதபடி யன்ரே இவருடையவும் இவரைச் சேர்ந்தவர்களுடையவும் வெளியீடுகளிருப்பது. **நம:** என்று கூட எழுதத் தெரியாமல் **நமஹா** என்று முழநீளம் நீட்டுமிவர்களோடு நாம் போராட நேருவதற்கு வெள்கவேண்டியிருக்கிறதந்தோ.

11. ப்ரக்ருத விஷயத்தைக் கேளீர். *வெயஹிம்ஸா ஹிம்ஸதா ஷூா-வநநீதி ஸூ-நீதிகஃ* என்றொரு திருநாமமாம். *நமாஸ்ஹுஜ்ஞா நம நதவெதஜ்ஞா நம கவிகவதா நாஷித் கூதஷித் ஷுஜ்ஞா। தயாவி வெருஜெண ஸ-வாதி ஷேராகம ஷேராதுவ-டிதெஷகரம நஜணா நாழ ॥ என்ற ச்லோகத்தை வெல்லகிற்கும் திவ்யஸூக்திகள் மலிந்த இந்த ஸஹஸ்ரநாமஸ்துதியில் இது பரமதிவ்யவாக்கு. இங்கு வக்தாவுக்கு விவக்ஷித மென்னவென்றால், வையஹிம்ஸை யாவது விதிப்ராப்தமான ஹிம்ஸை; யாகத்தில் பசுவிசஸநம் போன்ற ஹிம்ஸையைச் சொன்னபடி. அது ஹிம்ஸையேயானாலும் ஹிம்ஸையன்றென்று ஸ்தாபிப்பவர் தேசிகன் என்பது இங்கு விவக்ஷிதம். இது என்ன விஷயம்! என்ன ஸ்தோத்ரம்! ஒரு விவேகிசெய்யக் கூடிய ஸ்துதியா இது? என்ன விசேஷணமிட்டு ஆயிரத்தைப் பூர்த்திபண்ணலாமென்று ஆலோசித்தாலோசித்து அர்த்தமில்லாதபடி நுழைக்கப்படும் வம்பு தும்பு விசேஷணங்களில் தலையான தல்லவா இது. விஷயம் கிடக்கட்டும். இந்தச் செவ்வனே தெரிவிக்கவல்ல வாக்காவது உள்ளதோவென்று பார்த்தால் அதுதானு மில்லையே. 'அஹிம்ஸதா' என்கிற சொல் அஸம்பத்தமாயிற்றே! என்று நாம் ப்ரத்யவஸ்தாநம் செய்திருந்தோம். இங்கு மதாராந்தகருடைய ஸமர்த்தநமாவது, இங்குச் சொல்வடிவம் வையஹிம்ஸா அன்று, அஹிம்ஸா என்று மன்று; இரண்டிடத்திலும் பஹுவ்ரீஹியாக்கி வைத ஹிம்ஸ, அஹிம்ஸ என்று கொள்ளவேணும். விதிப்ராப்தமான ஹிம்ஸையையுடையவர்கள் — வைத ஹிம்ஸர்கள்; ஹிம்ஸையை யுடைய ரல்லாதவர்கள் அஹிம்ஸர்கள். வைத ஹிம்ஸர்களிடத்தில் (அல்லது வைத ஹிம்ஸர்களுக்கு) அஹிம்ஸத்வத்தை ஸ்தாபிக்கவல்லவர் தேசிகன் — என்று கொள்ளலா மாகையாலே சப்த தோஷம் தொலைந்து விட்டது — என்னுமிதுவே இவருடைய ஸமர்த்த நப்ரகாரம். இது அஸமஞ்ஜஸ மென்பதை விவரிக்கிறோம் கேளீர்.

12. ஒரு வ்யக்தியைச் சுட்டிக் காட்டி இவர் வைத ஹிம்ஸர் — அஹிம்ஸர் என்று சொன்னால் இதனால் வைத ஹிம்ஸையைச் செய்தவர், ஹிம்ஸையைச் செய்யாதவர் என்கிற பொருள் ஒரு நாளும் தேறாது. கூுலாறெ்ாவடிவாது என்று சொன்னால் குயவனிடத்தில் பானையுள்ளது என்றதாகத் தேறுமேயன்றி குயவன் பானையைச் செய்தவன் என்று ஒரு நாளும் பொருள்படாதன்றோ. ஹூதலு வடிவகு என்றால் தரையில் பானையுள்ளது என்றதாகும். ஹூதலு கவடிழ என்றால் தரையில் பானையில்லை என்றதாகும். தெவஉதுஃ ஹிம்ஸாவாது என்றால் சாத்தன் ஹிம்ஸையை யடைந்தவன் என்றதாகும். யஜ்ஞஉதுஃ கஹிம்ஸஃ என்றால் பொன்னன் நலிவு படாதவன் என்றதாகும். வேறுவிதமாக (இவர் நினைக்கிறபடி) பொருள்படாதென்பது கல்வெட்டு. வெயஹிம்ஸாகரு கஹிம்ஸாகரு என்று சொல்வடிவ மிருந்தாலொழிய இவர் கூறும் பொருள் ஏற்காது. பஹுவ்ரீஹிஸித்த மான வையஹிம்ஸ ஶப்தம் யாகத்தில் ஹிம்ஸையைப் பெற்ற பசுவைச் சொல்லுமத்தனை போக்கி *வபரவசாரணகஉஷாரணஃ* என்று காளிதாஸரால் கூறப்பட்ட ச்ரோத்ரியரைச் சொல்லாது. அப்படியே அஹிம்ஸ ஶப்தமும் ஹிம்ஸையைப் பெறாததொரு ப்ராணியைச் சொல்லு மத்தனை போக்கி ஹிம்ஸையைச் செய்யாத வ்யக்தியைச் சொல்லாது. அப்ராஹ்ம ணஃ என்கிற சொல்லைக் கொள்வோம். ந ப்ராஹ்மணஃ—அப்ராஹ்மணஃ என்று கொண்டால் ப்ராஹ்மண னல்லாதவனைச் சொல்லும் நவிஉஷெ ஸாஹணொ யவஷஸஃ. அல்லது யஷிநுஸஃ. கஸாஹணஃ என்று கொண்டால் ப்ராஹ்மணனையுடைத்தாகாத தொரு க்ராமத்தையோ தேசத்தையோ சொல்லுமே யல்லது ப்ராஹ்மணனை ஸ்ருஷ்டியாதவன் என்கிற விவக்ஷையில் 'அப்ராஹ்மணஃ' என்று உன்மத்தனும் ப்ரயோகிக்கமாட்டான்.

13. இதற்குமேல் நம் அந்தகர் என்ன சொல்லக்கூடு மென்றால், ஸுப்ராஹ்மணஃ, ஸுவர்ணஃ, ஸுயஜ்ஞஃ இத்யாதிபதங்களுக்கு ப்ராஹ்மணனை ஸ்ருஷ்டியாதவன், பானையை ஸ்ருஷ்டியாதவன், பணத்தை ஸ்ருஷ்டியாதவன் என்கிற பொருள்கள் தேறமாட்டாதாயினும் அஹிம்ஸஃ என்கிற சொல்லில் ஹிம்ஸையைப் பெறுதவன் என்னும் பொருளைப்போல ஹிம்ஸையைச் செய்யாதவனென்னும் பொருளையும் விவக்ஷித்தால் வசிக்கக் குறையில்லை யென்றும், அச் சொற்களுக்கும் இச் சொல்லுக்கும் வாசியுண்டென்றும் சொல்லக்கூடும். இதனில் மிக்கோரயர்வுண்டே? வக்தா இதை விவக்ஷித்தவரேயல்லர். இவர் இங்கே ஸமர்த்தனம் செய்ய நினைத்தால், இவர்க்கு வ்ருத்தபங்கம் அகிஞ்சித்கர மாகையாலே *வெயஹிம்ஸாஉஹிம்ஸாக்யஷா வநநீதிஸா-நீதிகஃ* என்பதே மூலபாட மென்று ஒரேயடியாக அடித்துவிடலாம். அதுதான் ஆபத்தில்லாதவழி. வையஹிம்ஸையை அஹிம்ஸையாக ஸ்தாபித்தவர் தேசிகன் என்கிற விவக்ஷைக்குத் தகுதியாக வெகு லலிதமாய் ச்லோகம் செய்கிற வழிகள் எத்தனையில்லை? இதென்ன தலைவேதனையான ச்லோகம். அர்த்தம் ஒரு அழகு; அதற்கு சப்தம் ஒரு அழகு; அதை ஸமர்த்திக்கும் பரிசு வெகு அழகு. இவர்கள் அபத்ரபையில்லாமல் ஸுஹ்ருத்கோஷ்டிகளில் உலாவக் குதுகலிக்கின்றனரந்தோ!. ஹிம்ஸவசம் தெரியவில்லையே.

## — வாதித்ரயகண்டந க்ரந்தநாம ஸங்கலநம். —

14. ப்ரக்ருத விஷயத்திற்குச் சேர இதற்கு முந்தின விஷயத்தை யெடுத்துக் கொள்வோமினி. *அயத்நக்ருத வாதித்ர — யகண்டந நிபந்தந:* என்பதொரு தெருநாமம். இதை நாம் நமது விமர்சநூலில் பரிஹஸித்திருப்பது வாஸ்தவம். இதைப்பற்றி எழுதுமிவர்— "இதைப் பரிஹஸிக்கின்ற இவர் (அண்ணங்கராசார்யர்) வாதித்ரய கண்டனம் என்பதை அநுஷ்டுப் பத்யத்தினால் அக்ஷரமாறுதலில்லாமல் அமைத்துக்காட்ட இயலுமா?" என்று உறுமுகிறார். தமக்கு சக்யமாகாதது யாருக்குமே சக்யமாகா தென்று நினைக்கிற பேதையர்களு முண்டிறே. *ஸுநாயாஸ ஸஉல்ஸ்ருத வாதித்ரய வண்டநஃ* என்றோ *ஸுப்ரயத்ந கருதா நவ-நக-வாதித்ரய வண்டநஃ* என்றோ அநாயாஸமாக அமைக்க ஏன் இயலாது. வ்ருத்தபங்கமும் யதிபங்கமும் மற்றும் பலபங்கங்களும் அமையும்படி ச்லோகம் செய்தால்தான் வாதித்ரய கண்டன மென்கிற க்ரந்த நாமம் ச்லோகத்திற்புகும் என்று நினைப்பதோடு நில்லாமல் இதைக் கூசாமல் வெளியிட்டும் வைக்கிற இவர்களே ப்ரஅண்டபண்டிதர்கள். மேலும் முக்கியமான விஷய மொன்று கேளீர். தேசிகக்ரந்தங்களின் திருநாமங்களைப் பெரும்பாலும் பர்யாய பதங்களை யிட்டே நிர்தேசிக்கிறார் விவாத ஸஹஸ்ர நாமகர்த்தா. அடுத்தபடி அர்ச்சிக்கப்படப்போகிற அதிகரணதர்ப்பண மென்கிற தேசிகக்ரந்தத்தை இவர் அதிகரணதர்ப மென்று நிர்தேசித்திருக்கிறாரே யொழிய அதிகரணதர்ப்பண மென்கிற நிஜநாமத்தையிட்டு நிர்தேசித்திருக்கவில்லை. *விநிவிஷ்டாதிகரண தவணருசஜஃ* என்றோ *ப்ரகடிதாதிகரண தவணாவியூஸக்ருதிஃ* என்றோ எளிதாக ச்லோகம் செய்யலாமாயிருக்க தர்ப்பண பர்யாயமான ஆதர்ஶபதத்தை யிட்டுச் செய்திருக்கிறார். இப்படி ஒன்றன்று, பலவுண்டு. இதேரீதியில்..........வாதித்ரிதய வண்டநஃ என்றால் ஒரு குறையுமில்லை. த்ரய மென்னவேண்டு மிடத்து த்ரிதய மென்பது ஸர்வஸாதாரணம். த்ரிதய பதமிடாமல் த்ரயபதமேயிட்டு ச்லோகம் பண்ணும் வழியையும் காட்டினோம். *தவிதஸுவா ஜாதூஸெந யஷிதீயதெ* என்னும்படி அந்த அந்தகருக்கு இந்த அந்தகரே தடிகொடுக்கத்தகுந்தவர்.

## — அதிகரணஸாராவளிநாம ஸங்கலநம். —

15. மஹத்தான விநோதத்தைக் கேளீர். தேசிகன் அதிகரணஸாராவளியை யருளிச் செய்தவர் என்று விவக்ஷித்து * கூரதாயீகரண ஸாராவலுமாவலு நுபிவாஜனி: * என்று அசடுச்லோக மொன்றை யிட்டுவைத்தார் நாமகாரர். இதில் ஒருபாதம் ஒன்பதெழுத்து, மற்றொருபாதம் எட்டெழுத்து. மிதமதிகளுக்கும் ஸம்பவிக்க மாட்டாத இப்படிப்பட்ட அவத்யங்கள் இதில் பஹுளம் — என்று நாம் விமர்சத்தில் எழுதியிருந்தோம். இதற்கு அந்தகர் எழுதுகிறார் — "அதிகரணஸாராவளி யென்கிற திருநாமத்தை அநுவதிக்கும்போது சந்தோபங்கம் வந்தேதீருமன்றோ" என்று. இப்படி இவர் எழுதி வெளியிட்டிருப்பதை ஸ்ரீமத் ஸ்ரீ ஸ்ரீ ஆண்டவன் முதலான பலபல வித்வான்கள் பார்த்தும் கண்டிக்காமலிருப்பது தான் ஆச்சரியம். ஒருபாதத்தை ஒன்பதெழுத்தாக்கி சந்தோபங்கத்தை விளைவித்தாலொழிய அதிகரண ஸாராவளி யென்கிற நூற் பெயர் ச்லோகத்தில் புகாதென்று கல்வெட்டாகக் கூறுமிவர் வித்வானென்று கூசாமல் வெளிவருகிறாரே! இதனில் மிக்கோரற்புதமுண்டோ? * விநிவிஷ்டாயிகரண ஸாராவலுமாவலுஸூக்தி: * சதமூக்ஷமாயிகரண ஸாராவளிகூக்தி வூஹ: * ஸவூஜயாயீகரண ஸாராவளி ஸஉவடக: * சதமூக்தாயிகரண ஸாராவளி....* * ஶாரீரகாயீகரண ஸாராவளிகூக்தி வூஹ: * என்றிப்படி பலவாறு நிரவத்யமாகவும் கர்ணச்ராவ்யமாகவும் ச்லோகமியற்றலாமாயிருக்க, ஓரிழவு மறியாத வொருவர் பரிஹாஸ்யதைக்காகவே நூலியற்றுவதும், ஹாஹா! இது எவ்வளவு உயர்ந்தநூல்! என்று கொண்டாட ஸஜாமஜ்ஜநங்கள் அவதரிப்பதும் ஆச்சரியம் ஆச்சரியம்! அற்புதம்! அற்புதம்!!.

## — ப்ரக்ருதிவதநுகரண மென்றதைப் பற்றி. —

16. இங்கே ப்ரக்ருதிவதநுகரணம் என்றொரு சாஸ்த்ரம் காட்டுகிறார் அந்தகர். நடாதூரம்மாள் இப்படிக் கொத்த வழியைக் காட்டியிருக்கிறாரென்றும் எழுதுகிறார். இதெல்லாம் அஸங்கத ப்ரலாபங்கள். கூரத்தாழ்வானும் பட்டரும் தேசிகனும் ச்ருதிவாக்யங்களைச் சேர்த்துப் பல ச்லோகங்கள் பணித்துள்ளார்கள். ஒருவரும் ஓரிடத்திலும் வ்ருத்த பங்கத்தை விளைத்ததில்லை. கூரத்தாழ்வான் * வதிம் விஶ்வஸ்ய தேஶ்வரஶிதி வரம்ஹ வாஸாக்ஷ: வரம் ஜ்யோதிஷ்க்வம் வரஶிதி அ நாராயண ஐதி ப்ரூதி:..........* இத்யாதி ச்லோகங்களிலும், பட்டர் * ஸவஷம் வமெஜ்யத்நாத்நும் ஸகுஶிநஹம் தஜ்ஜஸெஸ்வஸாநாஸ்: * * தெஜ: வரம் தஸவிதாவஷெரணம் யாதாவமெரணா ப்ரணவா தவணஷ * ஶ்ரூதாஸ ம்ஞ: வரிதஸெஷ்ஶு ஶிரூஸ அக்ஷவஷாணஸ ஆஹெ: * இத்யாதி ச்லோகங்களிலும் பலபல ச்ருதிவாக்யங்களை வ்ருத்த பங்கமில்லாதபடியே யமைத்திருப்பதைக் காணலாம். தேசிகன் யாதவாப்யுதயத்தில் கோவர்த்தநோத்தாண கதாஸந்தர்ப்பத்தில் கண்ணபிரான் கோபாலர்களுக்கு * யொவெ ஸொம் தெவதாஜதி யஜதெ ப்ரஸாயெ தெவதாயெ அவதெ நவரம் ப்ரவொதி வாவ்யாநுஹவதி * என்கிற தைத்திரீய யஜுஸ்ஸம்ஹிதாவாக்யத்தை யெடுத்து உபந்யஸிப்பதாகச் செய்தருளின ச்லோகம் * சுதிபஜெத நிஜாம் யதி தெவதாஜஹயதஸ்வதெ ஜஷதெவஸ்வஷ * என்று எவ்வளவு அழகாக அமைத்திருக்கிறார். நாமகாரர் ஒரு ச்ருதிவாக்யத்தையும் ச்லோகத்தில் இட்டிலர். அதிகரண ஸாராவளி யென்கிற நூற் பெயரை ஒரு அவத்யமுமில்லாதபடி யிட்டு ச்லோகமியற்ற அநாயாஸமான வழியிருக்கச் செய்தேயும் * விதஷாஜம் ஹநகதையாய் திண்டாடித் தெருவில் நிற்கிறார்; அவர்க்கு அந்தகர் குடைபிடிக்கவருகிறார். "அதிகரண ஸாராவளியென்கிற திருநாமத்தை அநுவதிக்கும்

போது சந்தோபங்கம் வந்தே தீருமன்றே" என்று கூசாமலெழுது மிவரை என்ன பண்ணி னுல் தீரும்? இரு திருச் செவிகளிலும் கன மகர குண்டலங்களணிவித்துப் பொன்னுடையும் போர்த்தி ஸத்கரித்தால் தீரும்.

## — *ரகுபுங்கவகத்யஸ்ரக் * தத்வமுக்தா கலாபஸ்ரக்* —

17. நாமகாரர் * ரவி–வ–ஂமவமஉ஼லூகஂ * என்றும் * தகவஉ–ஜாகமூாவ லூகஂ * என்றும் சில நாமங்கள் ஸ்ருஷ்டித் திருக்கிறுர். இவை மிகத்தவறென்று நாம விமர்சத்தில் விளக்கியிருந்தோம். இதற்கு அந்தகர் எழுதியுள்ள ஸமாதானம் வாய்கொண்டு சிரிக்கத்தக்கதன்று. * வயஉவி ழிவிதஂ வயஂ நஜாநாதி * என்கிற கணக்கிலே இவர் எழுதியுள்ளவற்றை ஒரு ஸஉஸ்ஸில் எடுத்துச்சொல்லும்படி கட்டளையிட்டால் அப்போது இவருடைய பாண்டித்யம் வெளியாகும். "ரவி–வ–ஂமவமஉ஼வூரகஂ, தகவஉ–ஜாகமூாவ வூரகஂ என்று பாடமானுலும் தோஷமில்லை" என்றெழுதுகிறுர். குற்றத்திற்கு லூகஂ என்பதோடு வூரகஂ என்பதோடு வாசியில்லையென்பதை இவர் தெரிந்துகொள்ள மறுபிறவி பிறக்க வேணும். தோஷமுண்டு என்பதற்கும் தோஷமில்லை என்பதற்கும் இவர் அதிகாரியன்றே. இங்கு இவர் * வால்மீகயே மஹர்ஷயே * என்கிற ஆதிகாவ்ய ப்ரயோகத்தையும் ஸ்ரீகோவிந்தராஜீய நிர்வாஹத்தையும் எடுத்துக் காட்டுகிறுர். காளிதாஸாதி கவிகள் இயற்றிய லக்ஷக்கணக்கான அநுஷ்டுப் பத்யங்களிலும், ஸ்வாமி தேசிகனருளிச் செய்த ஆயிரக் கணக்கான அநுஷ்டுப் பத்யங்களிலும், மற்றும் ஸர்வஸாதாரணமாக உலகில் வழங்கிவருகிற எண்ணிறந்த அநுஷ்டுப்பத்யங்களிலும் ஒரு மகலங்கூட எடுத்துக்காட்டத்தக்கதாய் இவர்க்குக் கிடைக்கவில்லையென்பது விளங்கிற்று. ஸ்ரீகோபால தேசிகன் பெரிய மஹர்ஷியாகையால் * குஷஉகவாநஜொஷஃ * என்கிற ஸமாதாநம் எங்குங்கொள்ளத் தக்கதென்று ஒரே வரியில் இவர் ஸமாதானமெழுதி முடித்திருக்கலாமே. ப்ரஹ்மஸூத்ர பாஷ்யமொன்றில் அபமப்தங்கள் மலிந்து கிடக்கின்றன; அந்த பாஷ்யம் ஒரு பெருங்கூட்டத்தினரால் ஆதரிக்கப்பட்டு வருகின்றது. அந்த பாஷ்யத்திற்கு வியாக்கியானம் செய்யப் புகுந்தவொருவர் அபமப்தங்களைக் கண்டு மிகவருந்தினுர். திருத்திவிடலாமென்று பார்த்தார்; திருத்தவொண்ணுதபடி அபமப்தங்கள் அளவுகடந்திருந்தபடியால் ஒரு வழியில் நுழைந்தார்; அதாவது — "வஹநவஷ் குஷஉகவஂ, வஷ ஜஷிகவஂ஋ ஜெஷ்ாதயிதஂ உவமஷஂாநு வூயஂஜுஜெத குஜாயஉாஃ" என்று ஓரிடத்திற்கு அவதாரிகையிட்டு 'வவஜெவாநஷ்த்ர வைஉத்ர ஊஷவஷ்ழ' என்றுர். அது அபாயமற்றவழி. அந்த வழியை இவ்வந்தகர் கைப்பற்றியிருந்தால் நாம் தோற்றேமென்று கைகூப்பிநிற்க நேருமே.

## — பரீக்ஷ்யலோகாந் கர்மசிதாந் விமர்சநம். —

18. ப்ரபந்த பாரிஜாதத்தில் நடாதூரம்மாள் * வரீக்ஷ்யொகாநு கஉஉசிதாநு * என்கிற உபநிஷத்வாக்யத்தையே தம்முடைய ச்லோகத்திற்கு ஒரு பாதமாக ஆக்கிக் கொண்டாரென்றும், அதில் ஒன்பது எழுத்துக்களிருக்கின்றனவென்றும், அதனுல் அநுஷ்டுப் சந்தஸ்ஸுக்கு பங்கம் விளையவில்லையென்றும், அதுபோலவே இந்த நாமகார நூலிலும் கொள்ள வேண்டியதென்றும் எழுதுகிறுர் அந்தகர். [அந்தகரென்கிற வ்யபதேசம் 'மதுராந்தகர்' என்னும் விவக்ஷையில் ஸங்க்ரஹச்சொல் — என்பது நம் அபிப்ராயம். திருமங்கையாழ்வாருடைய திருவல்லிக்கேணிப் பதிகத்தில் ஆறும் பாட்டின் ஆரம்பச் சொல்

வின் பொருள்தான் இதற்கு மென்று சிலர் கொண்டால் அதனை நாம் மறுப்போமல்லோம்; அதற்குரிய உபபத்திகளும் மலிந்தேயிருப்பதால்.] ப்ரபந்த பாரிஜாதத்தில் * பரீக்ஷ்ய லோகாந் கர்மசிதாந் * என்பதை ஒரு பாதமாக வைத்திருப்பது வாஸ்தவம். அப்படி இந்த நாமகாரர் ஏதேனும் ச்ருதிவாக்யத்தை அப்படியே உபாதானம் செய்திருப்பதுண்டோ? அப்படியிருந்தால் அதில் எழுத்து ஏறினாலும் குறைந்தாலும் குறை கூறவருவாரார்? ஒன்றுன அஹோபிலம் ஸ்வாமி பணித்த புருஷகாரமீமாம்ஸையில் * வேரிமாருதபூமேல் இருப்பாள் வினைதீர்க்குமே * என்கிற பாசுரம் ஒரு ச்லோகத்திற்குப் பூர்வார்த்தமாக அமைக்கப்பட்டுள்ளது. இப்பாசுரத் துணுக்கையை அநுஷ்டுப் சந்தஸ்ஸாகக் கொண்டால் முதற்பாதத்தில் ஏழு எழுத்துக்களே யிருப்பதால் ஒரெழுத்து குறைகிறதென்று * வேரி மாருத பூவின்மேல் – இருப்பாள் வினைதீர்க்குமே * என்று அச்சிடலாயிற்று. அதை ஸ்ரீமத் இஞ்சிமேட்டழகிய சிங்கர் கடாக்ஷித்தருளி ஓலை ஸ்ரீகோசங்களை யெடுத்துக்காட்டி "பூவின்மேல் என்றில்லை, பூமேல் என்று தானிருக்கிறது; இதனால் சந்தோபங்கம் சங்கிக்கலாகாது; உபாத்தமான ப்ரமாண வசனத்தில் தம்முடைய வாக்கை ஒன்றும் சேர்த்திராமையால் பாசுரமுள்ளபடியே யிருந்தாலும் சந்தோபங்க தோஷம் வாராது" என்று பணித்தருளலாயிற்று. ப்ரக்ருதம் * பரீக்ஷ்ய லோகாந் கர்மசிதாந் * என்பது தனியே ஒருபாதமாக அமைக்கப்பட்டது. அடுத்த பாதத்தில் * விப்ரோ நிர்விண்ண மாநஸ: * என்றுரே யல்லது * ப்ராஹ்மணோ நிர்விண்ண மாநஸ: * என்றுரல்லர். உபநிஷத் வாக்யத்தில் ப்ராஹ்மண: என்கிற பதமுள்ளதேயன்றி விப்ர: என்னும் பதமில்லை. அப்படியிருக்க 'ப்ராஹ்மணோ நிர்விண்ணமாநஸ:' என்னமல் 'விப்ரோ நிர்விண்ணமாநஸ:' என்றது ஏன்? என்று ஆராய்ந்தால் மருமம் விளங்கும். மஹா சாஸ்த்ரஜ்ஞரும் கவிஸார்வபௌமருமான நடாதூரம்மாளை அவ்யுத்பந்நரும் அக்கிலி பிக்கிலிகவியுமான நாமகாரர்க்கு த்ருஷ்டாந்தமாக எடுத்துக் காட்டுவது மஹத்தான ஸாஹஸம்.

## — ஒரு மடாதிபதி ஸ்வாமியின் திருவாக்கு —

19. இதை நன்கு விவரிப்போம். நாமகாரர் கவிபண்ணும் வழியை அடியோடு அறியாதவர். அவருடைய ஞானமும் முழு மோசமானது. அவர் எவ்வெவ்விடங்களில் தவறாக ச்லோகங்கள் செய்திருப்பதாக நாம் காட்டியிருக்கிறோமோ, அவ்விடங்களி லெல்லாம் ஒரு தவறுமில்லாமலும் அநாயாஸமாகவும் கர்ணச்ராவ்யமான முறையில் ச்லோகம் செய்ய முடியுமென்பதை நாம் ஏற்கெனவே காட்டியிருக்கிறோம், இப்போதும் காட்டுகிறோம். தேசிக திவ்யஸூக்திகளில் ரகுவீரகத்யம் என வழங்கப்படும் ஸ்துதிக்கு ஸ்வாமி யிட்டருளின திருநாமம் மஹாவீரவைபவம் என்பது. இவ்விஷயம் அந்த ஸ்துதியில் முடிவு ச்லோகத்தினால் ஸுஸ்பஷ்டம். * ஸவஹய ஹெஷைஜஹெதந்தஂத உஹாவீர வெஹவம ஸூயிய: ! * என்பதன்றோ ஸ்வாமியின் ஸ்ரீஸூக்தி. ஏவஞ்ச, மஹாவீர வைபவமருளிச் செய்தவர் என்ன வேணுமானால் * விநிதிதஹத உஹாவீர வெஹவ:...........* என்றோ, * ஸதநூஹத உஹாவீர வெஹவா ஙிவநூமஹநூஹ: * என்றோ எளிதாக ச்லோகமிடலாம். ரகுவீரகத்ய மென்று வழங்கி வருகிறபடிக்குச் சேர ச்லோக மியற்ற வேணுமானால் * ரவஹவீர உஹாமஹநூ ஹெஷாதநிஉரண உக்ஷிண: * என்று எளிதாக இயற்றலாம். மற்றும் பலவாறாகவும் ச்ராவ்ய ச்லோக மியற்றலாம். இவ்வழிகளை யெல்லாம் விட்டு * ரவஹவஹஂமவமஹநூஸகீ * என்று அபத்தமயமாக இயற்றினர். இவர் தேசிக திவ்யக்ரந்தங்களின் திருநாமங்களை மாற்றாமல் வைத்து ச்லோகமியற்றுகிறவராம். அதற்காகவே அதிகரணஸாராவளி நாமத்தைச் சந்தோபங்கமில்லாமே வைக்கமுடியாமற் போனதாக ஏதேதோ இந்த அந்தகர் எழு

கிறார். இவர்கள் உண்மையில் அஜ்ஞானத்தினலெழுதுகிறார்களா? விப்ரலிப்ஸையினலெழுதுகிறார்களா? என்று ஒரு மடாதிபதியை ஸந்தித்து நாம் கேட்க நேர்ந்தது; "எதற்காக இப்படி ஸந்தேஹம்? உள்ளபடி இதுகளுக்கு உள்ள சரக்கு அவ்வளவுதான; படிப்பே குறைவு; ஆராய்ச்சி அடியோடு பூஜ்யம்; அந்த வகுப்பில் கட்டுப்பாடு அதிகமாகையால் 'ஸ்வாமி ஸாதிச்சாகிறது, ஸ்வாமி ஸாய்க்கும்படியாயிருக்கும்' என்று சொல்லத் தொடங்கிவிடுகிறதுகள். எல்லாம் ஹம்பக்கு. பேனவைத் தொடாமல் கௌரவமாகக் காலம் கழிக்கலாம்; அது தெரியாமல் அசடு பிசடாக எதையோ எழுதிவைத்துத் தொழுவில் அகப்பட்டுக்கொண்டு தத்தளிக்கிறதுகள்" என்று அந்த மடாதிபதிகள் பணித்தபடி. இந்த அந்தகரிடத்தில் சிறிதாவது சரக்கிருக்குமென்று நாமும் மயங்கியிருந்ததுண்டு. இந்த மயக்கத்தை இப்படியா அறுத்துத் தொலைக்கவேணுமிவர். ஹந்த பலவதீ ஹவிதவ்யதா.

## அந்தோ! இது என்ன மதிக்கேடு!

20. நாமகாரர் * கரதகநுகமாய: கஞ்ரூபராக்ஷீ த்ருகாரக: * என்றொரு திவ்ய ஸூக்தி ஸாதித்திருக்கிறார். இதைப்பற்றி நம்முடைய விமர்ஸத்தில் நல்ல திருமண்டபப்படி நடந்திருக்கிறது. இதில் அந்தகர் பிரளயம் செய்கிறார். இங்கு விஷயமென்னவென்றால், தேசிகன் கழற்பா என்றொரு பிரபந்தம் பாடியதாக ஐதிஹ்யம். ஸம்ப்ரதாயத்தில் அது கிடையாது. அதைப்பற்றி விசாரமில்லை. கழல் என்றால் கச்சக்காய். கழற்பாவுக்கு குபேராக்ஷீ கீதியென்று பெயர்வைத்தார் நாமகாரர். குபேராக்ஷீ என்று கச்சக்காய்க்குப் பெயராதலால் இஃது ஒக்கும். கர்ணருந்துதமான ரசனையைப்பற்றியும், இங்கு நேர்ந்துள்ள அச்சுப்பிழையைப் பற்றியும் நாம் விமர்சித்திருந்தோம். இவ்விடத்திலும் அந்தகர் தேள்கொட்டின திருடன்போல் வாளாவிருக்கத்தக்கவரேயொழிய, கப் சிப் வாய்திறக்கத் தக்கவரல்லர். தேசிகன் பந்துப்பா, கழற்பா பாடினவர் என்பதைத் தெரிவிக்கவேணுமானல் * ஸௌம்ய கந்துக மாயாக்ருத் குபேராக்ஷீப்ரபந்தக: * என்றிங்ஙனே எளிதாகக் கனியயற்றப் பலவழிகளில்லையா? மாய:கஞ்-என்றொருபாதமுடிவாம்; ரூபராக்ஷியென்று மற்றொரு பாதப்ராரம்பமாம். இது என்ன ப்ராரப்தகர்மமோ தெரியவில்லை. இந்த கர்மம் குலங்குலமாகப் படர்ந்து செல்லுகிறதே!

## — வ்ருத்தபங்கமும் யதிபங்கமும் —

21. இவ்விடத்தில் இரண்டு விஷயங்கள். (1) 'மாய: கஞ்' என்றொருபாதம் நிறுத்தி ரூபராக்ஷியென்று மேல்பாதம் தொடங்கினது தவறென்பது ஒரு விஷயம். இது இந்த நாமஸ்துதியில் நூற்றுக்கணக்கான இடங்களில் உள்ளதே. (2) ரூபராக்ஷீ என்று தீர்க்கமாக இருக்கவேண்டியது (க்ஷி) என்று ஹ்ரஸ்வமாக இருப்பது வ்ருத்தபங்கரூபமான தவறென்பது மற்றொரு விஷயம். இவ்விரண்டுக்கும் அந்தகர் ஆச்சரியமான ஸமாதானமெழுதுகின்றார்; க்ஷீயென்கிற நெடில் குறிலாக இருப்பதனல் வ்ருத்தபங்கம் கிடையாதென்று ஸ்தாபிக்க * பஞ்சமம் லகு * என்று ஏதோ எழுதுகிறார். இது தவிர, நம்முடைய பலபல ச்லோகமாலிகைகளையெல்லாம் தேடிப்பார்த்து அவற்றிலும் யதிபங்கமிருக்கிறதென்று காட்டுகிறார். இங்கு இவருடைய மருளை அறவேயொழிப்போம்.

22. நாமகாரருடைய க்ருதி முழுவதும் அநுஷ்டுப்பு. அதில் நாம் காட்டியுள்ள அவத்யங்களுக்கு இவ்வுலகில் எந்த க்ருதியையும் இவர் உவமைகாட்டமுடியாது. மத்வாசா

ருடைய கீதாபாஷ்யத்தில் "ஶ்ரீ மத்பூஜ்யபாதை" என்றிருப்பதைக் காட்டுகிறார். இது நம்முடைய விமர்சத்தில் நாமே யெடுத்துக்காட்டியிருப்பது. அதில் இரண்டாவது ஆஹ்நிகத்தில் (பக்கம் 38, பாரா 78ல்) நாமெழுதியிருப்பதையே இவர்தாம் கண்டுபிடித்த ஸமாதானம்போல் எழுதிவைப்பது விப்ரலம்பமேயாகும். அநுஷ்டுப்ரசனையில் நாமகாரருக்கு மத்வாசார் உவமை; மத்வாசாருக்கு நாமகாரர் உவமை. இவ்வளவோடுஸரி. ஏற்கெனவே நாமெழுதியிருப்பதாவது;—

(16) ...... இப்படிப்பட்ட சங்கைகள் பல நூற்றுக் கணக்கிலிருப்பதைக் காட்டியிருப்பதற்கு ஒரே பதில் சொல்லலாமென்று தோன்றுகிறது. அதாவது, பகவத்கீதைக்கு மத்வாசார் பாஷ்யம் பண்ணுகையில் மங்கள ச்லோகத்தில் * ...... ஶ்ரீமத்பூஜ்யபாதை: * என்று உத்தரார்த்தம் அமைத்தார். அ என்று வ்யாஸருக்குப் பெயராம்; அவர் பூஜ்யராகையாலே பூஜாயாம் பஹுவசநம் ஆந் என்பதாம். பூஜ்யரான வ்யாஸரை என்று அர்த்தமாம். முதற் பாதத்தின் முடிவில் (ஶ்ரீ) என்று போட்டார். மேல் பாதத்தில் (பாதை:) என்றார். டீகாகாரர் "ந அந்த்ய யதிபங்கோ தோஷ:; தஸ்ய காவ்யவிஷயத்வாத்; ஶாஸ்த்ரே ...... இதி...." என்று எழுதிவைத்தார். ஶ்லோகத்தில் அப்படிச் சொல்லவேண்டாம். யதிபங்க மென்பது ஏகதண்டியதி விஷயமே யொழிய த்ரிதண்டியதி விஷயமன்று. அப்படியே கொண்டாலும், இந்த நாமாவளீ கர்த்தாவுக்கு ஆசார்யர் ஒரு யதி; சிஷ்யர்களான யதிகள் மூவர்; ஏக காலத்தில் யதிகள் நால்வர்க்கும் பங்கம் வாராது. ஒருவர்க்கு வந்தால் மற்ற மூவர் அதை நிரஸித்து விடுவர்கள். ஆகவே யதிபங்கோ ந தோஷாய. என்று சொல்லிவிடலாம்—என்று எனக்குத் தோன்றினதைச் சொன்னேன். எல்லாரும் ரஸித்தார்கள். * ...... * ஸங்கல்ப ஸூர்யோதய ஶ்ரீஸூக்தியினால் யதிகளுக்கு பங்கத்தை தேசிகனே காட்டியிருப்பதால் யதிபங்கோ ந தோஷாய. என்றும் எழுதியிருக்கிறோம். இதில் அந்தகர் காவ்யாலங்காரா:

## நமது உக்திகளும் தேசிக திவ்யஸூக்திகளும் ஒருமிடறென்பது

23. திருப்பாவைப் பாசுரங்களை நாம் ஸங்க்ரஹத்தில் ச்லோகமாக்கியிருக்கிறோம். அதிலிருந்து இவர் காட்டும் யதிபங்கம் அதிகரணஸாராவளியிலும் தத்வமுக்தாகலாபத்திலும் விசேஷமாக இடம்பெற்றவை. ஸ்வல்பம் உதாஹரித்தால் போதுமன்றோ. அதில் (ச்லோ. 2.) * ...... * * ...... * (11) * ...... * (45) * ...... * (49) * ...... * (55) * ...... * (128) * ...... * (125) * ...... * (62) முதல் பாதத்தில் இரண்டு யதி. இங்ஙனே பல பல காணலாம். தத்வமுக்தாகலாபத்திலும் இங்ஙனே ஸுலபம். (ச்லோ. 53.) * ...... * (60) * ...... * (54) * ...... * .... .... இத்தகைய யதிபங்கங்களையேயன்றோ அந்தகர் நம்முடைய ஶாஸ்த்ரவிஷயக

ஶ்லோகஸ அனேகங்களில்காட்டுவது. ந்யாயஸித்தாஞ்ஜந—ந்யாயபரிஶுத்தி—தத்வடீகா—ஸர்வார்த்தஸித்த்யாதிகளில் பல நூற்றுக்கணக்கான அநுஷ்டுப்புக்களன்றோ வாஷ்ஸம்ஹீதகளிலெகெளாக விளங்குவன. குப்பையிலெறியவேண்டிய நாமகாரானுஷ்டுப்புப்போன்ற ஒரு அநுஷ்டுப்பாவது அவற்றிலிருந்துகாட்டமுடியுமோ?

24. ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் * கிரீடசூடரத்நராஜிராதிராஜ்யஜல்பிகா * என்கிற ச்லோகத்தைப் பற்றி கீர்த்திமூர்த்தியான. திருச்சி. எ. வி. கோபாலாசாரியஸ்வாமி யெழுதியிருப்பது ஜகத் ப்ரஸித்தம். அவர் இப்போதிருந்தால் இந்த நாமகாரருடைய அபத்தக்களஞ்சியம் படுகிறபாடு தெரியுமே.

## — அதிகரண சிந்தாமணி விஷயம் —

25. ஸ்வாமியின் அதிகரண ஸாராவளிக்கு அதிகரண சிந்தாமணி என்கிற வியாக்கியானம் திருக்குமாரர் ஸாதித்ததாக வெளிவந்திருப்பதை நாமறிவோம். ஸ்ரீமத்திருப்புட்குழி ஸ்வாமி நன்கு ஆராய்ந்ததில் இது திருக்குமாரருடைய க்ருதியன்று என்று நிர்ணயித்ததை அந்த ஸ்வாமியின் திருக்குமாரரான [தீவாதூளவதீவ] பட்டண்ணு ஸ்வாமி பலகால் பணிக்கக் கேட்டிருந்ததை நாமெழுதினேம். அவர்கள் பரமபதித்துவிட்டாலும் ஸ்ரீமதுபயவே. இளங்காடு. ரங்காசார்யஸ்வாமி பாங்காக வெழுந்தருளியிருப்பதால் அந்த ஸ்வாமி பக்கலிலே தத்துவமுணரலாம். அஹோபிலமடத்தின்மூலமாக அதிகரணஸாராவளி, வியாக்கியான ஸ்ரீகோஶம் வெளிவந்தபோது ஸ்ரீ ஸ்ரீ. இஞ்சிமேட்டழகியசிங்கர் பலகாலருளிச்செய்யக் கேட்டதுமுண்டு — "அதிகரண சிந்தாமணி திருக்குமாரருடைய க்ருதியாயிருக்க ஔசித்ய லேஶமுமில்லைதான்; நிரூபகர்களான பெரியார்கள் அப்படித்தான் திருவுள்ளம் பற்றுகிறார்கள். ஒரு ப்ரஸித்தியிருப்பதைக்கொண்டு நாம் வெளியிட்டபடி." என்று.

## — ஆக்ஷபாதீயம் என்பது அசுத்தமே —

26. ஆக்ஷபாதம் என்றோ அக்ஷபாதீயமென்றோ ப்ரயோகிக்கலாமே யொழிய ஆக்ஷபாதீய மென்று பிரயோகிப்பது ஸர்வாத்மநா அஸம்பத்தமே. ஸ்வாமி யதிராஜஸப்ததியில் * ஆக்ஷபாதம் ஶிஶிக்ஷே * என்றார். அதிகரணஸாராவளியில் (122) * வைஶேஷிகாக்ஷபாதா: * என்றார். தலைகீழாக நின்று தவம் புரிந்தாலும் ஆக்ஷபாதீய மென்பது ஸாது வாக மாட்டாதென்பதைத் தாமே தெரிந்து கொண்டவிவர் பாடத்தைத் திருத்திக் காட்டுகிறார். நாம் உபதேசித்த வழி இதுதான் 750 இடங்களும் திருத்தவேண்டியவைகளே. நைஷதீயசரிதம் என்பதையும் ஔபமன்யவம் என்பதையும் இங்கே யெடுத்துக் காட்டுகிற அந்தகர்க்கு அன்புடனே தத்துவமுணர்த்துகிறோம். நைஷத: என்று நள மஹாராஜனுக்குப் பெயர். தஸ்ய சரிதம்—நைஷதீயசரிதம். இதில் ஆக்ஷபாதம்போலும் கிடையாது. உபமந்யுவின் அபத்யம்—ஔபமன்யவ:, தஸ்யேதம்—ஔபமன்யவம். இதிலும் அஸம்பத்தமான தொன்றுமில்லை. அக்ஷபாத ஸம்பந்தியானது ஆக்ஷபாதம். இதுதானே ஸூத்ரத்தில் விவக்ஷிதம். இதற்குமேல் ஈயப்ரத்யயம்பண்ணி ஆக்ஷபாதஸம்பந்தியாக இவர் எதைக்காட்டுவது? ஆகாஶத்தைத்தான் காட்டவேணும். * ஸந்து ஸஹஸ்ரஶ: ஸவிதே * என்றொருவர்; ஸவிதே வராது, ஸவிதி யென்று சொல்லவேணுமென்று சிக்ஷித்தார் ஒரு பெரியவர். ஸவிதே என் வராது? ஸவிதேஶாதயஶ்ச என்று இருக்கிறதே, அது தப்போ? என்று உறுமினராம். அவருக்குத்தம்பியா இவர்? அல்லது இவரேஅவரா? ஸ்ரீமதாண்டவன் கேட்பது.

## — அதிகரணதர்ப்பணத்தைப்பற்றி. —

27. அதிகரணதர்ப்பணம் இப்போது கிடையாதென்பது நிர்விவாதம். இதையருளிச் செய்யவேணு மென்று ஸ்வாமி ஸங்கல்பித்திருந்ததுண்டு. [illegible]த்தாலே யருளிச் செய்வது பெரும்பாலுங்கண்ட [illegible]. உண்மையில் அருளிச் செய்யப்பட்டிருந்து லுப்தமாய் விட்டதென்றாலும் குறையில்லை. பந்துகழலம்மானை யூசலேசற்பாக்களும் ஸங்கல்பத்திலிருந்தவத்தனை என்றே பெரியார்கள் பகர்வது. இந்த க்ரந்தங்கள் வெகுகால மாகவே கிடைப்பனவல்லவாதலால் இங்கு நாம் வீணாக க்ரந்த விஸ்தரம் செய்யகில்லோம்.

## — அந்தகர் காட்டும் நமது முத்ரண ஸ்காலித்யங்களைப்பற்றி. —

28. நாம் ஸொந்தமாகப் பல நூறு நூல்களையியற்றி வெளியிட்டதுமன்றி ஸ்ரீமத் வேதாந்த தேசிக க்ரந்தமாலை, ஸ்ரீமத் வரவரமுநீந்த்ர க்ரந்த மாலை, பகவத் ராமாநுஜ க்ரந்தமாலை முதலிய பூர்வாசார்ய க்ரந்த மாலைகள் பலவும் பதிப்பித்திருக்கிறோமல்லவா? அவற்றுள் தேசிக க்ரந்தமாலையில் சில பல அச்சுப்பிழைகளை அந்தகர் தாம் குறிக்கொண்டிருப்பதாகக் காட்டி சதுச் ச்லோகீ பாஷ்யத்திலிருந்தும் ஸ்தோத்ர பாஷ்யத்திலிருந்தும் இரண்டு வாக்யங்களை யெடுத்துக் காட்டி, பழைய முத்ரணப்படியே நாம் அச்சிட்டு விட்டதாகவும் புதிதாக ஶோதநம் செய்யவில்லை யென்றும் எழுதுகிறார். இவருடையவும் இவரைப் போன்றவர்களுடையவும் வழக்கமென்னவென்றால் நாம் உபபத்திகாட்டி ஶோதநம் செய்தால் அங்கு ஹாஹாகாரம் செய்வதும், ஶோதநம் செய்யாது விட்டிட்டால் குறை கூறுவதுமேயாம். நாம் தேசிக திவ்ய ஸூக்திகளில் பல ஶோதநங்களை ஸதாசார்ய ஸந்நிதியில் கேட்டு வெளியிட்டிருக்கிறோம். அவற்றில் சிலவற்றை மட்டும் இங்கு உதாஹரிக்கிறோம்.

## — தேசிக திவ்யஸூக்திகளில் நமது ஶோதநங்கள் —

(1) யதிராஜஸப்ததியில் *ரஸபரிமளச்லாகா கோஷஸ்புடத்புடபேதநம் லவண வணிஜ: கர்ப்பூரார்க்கம் கிமித்யபிமந்வதே* என்று படித்து வருகிறார்கள். ரஸத்தையும் பரிமளத்தையும் பற்றி யுண்டான ச்லாகா கோஷங்கள் பட்டணமெல்லாம் மலிந்திருக்கப்பெற்ற பச்சைக் கருப்பூரத்தின் விலை உப்பு வியாபாரிகளுக்கு எப்படி தெரியும்? என்பது இங்கே தாற்பரியமாகிறது. ரஸபரிமளேத்யாதி விசேஷணமானது கருப்பூரத்தில் அந்வயிக்கக்கூடியதே யொழிய கர்ப்பூரமூல்யத்தில் அந்வயிக்கக்கூடியதன்று; ரஸமும் பரிமளமும் கர்ப்பூரத்திற்கு உண்டேயல்லது கர்ப்பூரமூல்யத்திற்கு ஸம்பாவிதமன்றே. ஆகவே அவை கர்ப்பூரமூல்யத்தில் அந்வயிக்கும்படியாக ச்லோகம் காண்பது தவறு. விசேஷணமானது விசேஷ்யாத் அந்யத்ர அந்வயித்துப் பொருள் தருவது ஸர்வாத்மநா அஸங்கதம். ஆதலால் இங்குப் பாடத்தவறு நிச்சிதம். கர்ப்பூரார்க்கம் என்பது பாடமன்று; கர்ப்பூரோத்தம் என்பதே பாடம். *மதல்லிகா மசர்ச்சிகா ப்ரகாண்ட முத்ததல்லஜௌ * என்ற அமரகோசத்தின்படி உத்த சப்தம் ச்ரேஷ்ட வாசகம். பட்டரும் ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில்* அநுமணி மகரோத்கௌ ரங்கமந்திராம்ருதாப்தே:* என்று உத்த சப்தத்தையிட்டு ப்ரயோகம் செய்தருளியிருக்கிறார். பெரும்பாலும் பட்டர் ப்ரயோகங்களைப் பின்பற்றியே ஸ்வாமி ப்ரயோகிப்பது வழக்கமாதலால் இங்கு அந்த ப்ரயோகமேயுள்ளது. ஆக, கர்ப்பூரோத்த மென்றது கர்ப்பூரச்ரேஷ்டமென்றதாயிற்று. விலைக்கு வாசகமான அர்க்கமென்னும் சப்தம் இங்குக் கிடையாது. இப்போது *ரஸபரிமளேத்யாதி விஶேஷணம் (ச்ரேஷ்டமான) கருப்பூரத்திலேயே அந்வயிப்பதால் ஒரு விதமான பாதகமுமில்லை. இந்த ஶோதநத்தைச்சிலர் ஆமோதித்தார்கள்; பலர் மறுக்கிறார்கள்; எதனால்?

(2) த்ரமிடோபநிஷத்தாத்பர்ய ரத்நாவளியில் (3—5.) * மொய்ம்மாம் பூம்பொழிற் பொய்கை என்கிற திருவாய் மொழிக்காக இட்டருளின ச்லோகத்தில் * வம்பவிழ்கோதை பொருட்டா மால் விடையேழுமடர்த்த* என்றதற்குச் சேர இட்டருளினபாகம் "கோதா லக்ஷாவமர்தே" என்று படிக்கப்பட்டுவருகிறது. மூலத்தில் கோதை யென்பதற்கு 'மயிர் முடியை யுடையவள்' என்று பொருள்: அதனால் நப்பின்னைப் பிராட்டியை விவக்ஷிக்கிறது. எருதேழடர்த்தது நப்பின்னைக்காகவாதலாலும். அவளுக்கு ஸம்ஸ்க்ருதத்தில் நீலா என்கிற திருநாமமுண்டேயல்லது கோதா என்று பெயர் கிடையாதாதலாலும், கோதா என்பது ஆண்டாளுக்கே பெயராதலாலும், திருவாய்மொழியில் ஆண்டாளைப் பற்றின ப்ரஸ்தாவமே இல்லையாதலாலும் இங்கு *நீளார்த்தோக்ஷாவமர்தே* என்றிருந்த பாடம் * கோதார்த்த...என்று பிறழ்ந்துவிட்டது. [இந்த ஸோதநத்தில் ஸோதநீயமான விசாரம் ஒயவில்லை.] எதனால்?

(3) கோதாஸ்துதியில் *தாதஸ்து தே மதுபித:* என்னும் ச்லோகத்தில் "கர்ணம்ருதை: ஸ்துதிசதை ரநவாப்தபூர்வம்" என்று படித்து வருகிறார்கள். இதுவும் பிறழ்வு. "கர்ணம்ருத ஸ்துதிச்தை:" என்று ஸமஸ்தமான பாடமே ப்ராசீநம். நூற்றுக்கணக்கான பாசுரங்களைக் கர்ணம்ருதமாக அருளிச்செய்த முதலாழ்வார்கள் திருமழிசைப்பிரான் குலசேகராழ்வார் முதலானோர்க்கும் கிடைக்காத பெரியாழ்வாரென்னும் பெயர், ஆண்டாள் சூடிக்களைந்த மாலையை உபஹரித்ததனாலே விட்டுசித்தர்க்குக் கிடைத்தது—என்பது இங்கு விவக்ஷிதம். 'கர்ணம்ருதஸ்துதிஸதை:' என்று பாடமிருந்தால்தான் பஹுவ்ரீஹிக்கு இடமுண்டாகி அவ்வாழ்வார்களை க்ரஹிக்கமுடியும். [கர்ணம்ருதை: ஸ்துதிஸதை:] என்று வ்யஸ்தபாடமிருந்தால் பெரியாழ்வாருடைய ஸ்துதிஸதங்களே விவக்ஷிதமாகும். அது சுவையற்றது. தேசிகன் திருவுள்ளம்பற்றினதேயன்று. தவறனதே அப்பாடம். [இந்த ஸோதநத்திலும் மறுப்பே.] எதனால்? நாம் வெளியிட்டதனால்.

(4) அடைக்கலப்பத்தில்—(பா. 7)ல் "வழங்கியுந்தான் மிகவிளங்கும்" என்று படிக்கப்பட்டு வருகிறது. இது மிகவும் அநுபபந்நம். "வழங்கியுந்தான் மிக வெள்கும்" என்பதே புராதன பாடம். *ஐச்வர்யமக்ஷரகதிம்* என்கிறபட்டர் ஸ்ரீஸூக்தியில் 'த்வம் லஜ்ஜஸே' என்றதை அடியொற்றி ஸாதித்தவிதனில் வெள்கும் என்பதே உயிரான சொல். விளங்குமென்பது ஒருவிதத்திலும் பொருந்தாதாதலால் தவறனபாடமே. இதிலும் எதிரம்புகோப்பதே.

(5) ஸ்தோத்ரரத்நத்தில் (45) ஸதயமென்பதின் விவரணத்தில் "க்ஷமிதா நாமஸாக்ஷாத்மஹாவதாநே" என்றும் "ஸாதஹோமவதாநே" என்றும் பழைய அச்சுப்பிரதிகளில் பாடம். இது அஸம்பத்தம், அநந்விதம் என்பதை உபபாதித்து "ஸாத்தோமவதாநே" என்கிற சுத்தஸம்பவமானபாடத்தை நாம் காட்டியிருக்கிறோம். ஸ்ரீமத் கோழியாலம் ஸ்வாமி இதில் காரணவிசேஷத்தாலே போராடினர். அவருடைய சிஷ்யரான (கீர்த்திமூர்த்தி) ராயம்பேட்டை க்ருஷ்ணமாசார்யர் மிகமிகவுகந்து ஸாத்தோமவதாநே என்பதுதான் யுக்தமான பாடமென்று ஆர்யதர்மபத்ரிகையில் வெளியிட்டார். உகப்பார்சிலராயும் மறுப்பார் பலராயுமிருப்பதை கவனிப்பது. நாம் திருத்தாமலிருப்பதே க்ஷேமமல்லவா?

## — நாமகாரருடைய முதல் ச்லோகத்தின் அசட்டுத்தனம். —

29. * வெங்கடேசகரவாருஹா நந்தாய ஸ்வஜிதஃ * என்பது உபக்ரமம். இதை நாம் திருத்திக் காட்டியிருப்பதாவது * வெங்கடேசகரவாரு வஸவா நந்தாய ஸ்வஜிதஃ *

என்று. இப்படி திருத்தினுலொழிய கதியில்லை யென்பது கல்வெட்டு. ஸ்வ என்பது எங்கே அந்வயிக்கிறதென்று கேட்டால் ஸூத்தில் தானென்று சொல்லித் தீரவேணும். அந்த பதமோ அடுத்ததாக இல்லை. அநந்தார்யஸ்வப்நம் ஸ்வ மென்று காட்டப்படுகிறது. அநந்தார்யஸ்வப்ந மென்று ஒரு வஸ்து ஏற்கெனவே ப்ரஸித்தமாயிருந்தாலொழிய ஸமாஸம் ஸரியாது. அநந்தாசார்யருடைய ஸ்வப்நம் யாராலே ஸ்வ மென்று கேட்டால் அநந்தா சார்யராலே யென்று சொல்லித் தீரவேண்டும். பையாகுட்டி வாக்யார்த்த மென்று ப்ரஸித்த மான வொரு வாக்யார்த்தத்தில்தான் இது சேரும். "அநந்தார்ய ஸ்வப்ந என்றால் கோவிந்தா சார்யருக்கு ஸ்வப்நம் ஏற்பட்டதாகத் தேறுமோ?" என்கிறார் நம் அந்தகர். கோவிந்தாசா ர்யருக்குத் தேறாது; ஹ்ருஷீகேசாசார்யருக்கே தேறும். இப்படி ஸமாஸங் கொண்ட சொல்தொடர் இப்பூமண்டலத்தில் ஒரு ஸாமாந்ய கவியின் வாக்கிலாவது காட்ட முடியுமா? தேடிப் பார்க்கலாமே. அசட்டுக் கவிக்கு அசட்டுப் பண்டிதர்தானே பரியவேணும்.

30. *தோதாரம்பா மஹாவநேபரமம்வத்ஸராண்யாவாஸ ஸாஸநாத:* என்ற உத்தரார்த் தத்தில் நாம் என்ன தோஷம் செய்திருக்கிறோ மென்பதை க்ரஹிக்கமாட்டிற்றிலர் அந்தகர். *ஸப்தமீ மௌண்டை:* என்கிற பாணிநி ஸூத்ரத்தை யெடுத்துக் காட்டியதும் நாம்; ஸப்தமீ இதி யோகவிபாகாத் ஸமாஸஸித்தி: என்று வழி காட்டியதும் நாமே. மஹாவநவாஸ என்கிற சொல்வடிவம் தேறாதென்று நாமெழுதியிருக்கவில்லை. * மஹாவநவாஸக்ஷிப்த ஆத்மபரவஸ்தா: * என்றிருக்கவேணுமென்று எழுதியுள்ள நமக்கு அந்த ஸமாஸம் அநுசிதமாவதற்கு ப்ரஸக்தியே கிடையாது. இப்போது காண்கிற ஸமாஸ ஸந்நிவேசம் அஸம்பத்த மென்பதையறிவதற்கு இவர் அதிகாரியல்லர். "ஸ்வாநந்தமூ ஸ்வாரஸ்ய ஜாநீதே" என்பதை இதே யிடத்தில் எடுத்துக் காட்டியிருக்கிறோம். அந்தகர் இவ்விடத்தில் நம்மைப் பற்றி யெழுதியுள்ளார் "சிறந்த வித்வானாயிற்றே இவர்" என்று. இவருடைய அபத்த பஞ்சாங்கத்தை விமர்சிக்கச் சிறந்த வைதுஷ்யந்தான் வேணுமோ? * மஹாவநவாஸக்ஷிப்த ஆத்மபரவஸ்தா: * என்றிருக்கவேணுமென்று நாமெழுதியிருந்ததை தூஷிக்கப் புகுந்த விவர், "க்ஷிப்த என்பதனால் தன் கர்மாவை மஹாவநவாஸத்தினால் கழித்தார் என்பதாகவன்றோ தேறும" என்றெழுதுகிறார். ஸகலகிஸலய மநீஷாநிதியே! இங்கு மஹாவநவாஸத்தில் பன்னிரண்டாண்டு கழிக்கப்பட்டதாகச் சொல்லப்படுமே யல்லது கருமம் க்ஷிப்த மென்று கொள்ள வழியேது? இதைப்பற்றி இவர் ஒரு வித்யார்த்தியிடம் பேசி அவனது நெஞ்சில் தமது தூஷணத்தைப் பதியவைப்பரா? இவருக்கேற்ற வித்யார்த்தியாயிருந்தால் ஸாத்யமே.

## — பொறுக்க முடியாத தலை வேதனை. —

31. நம்முடைய விமர்சத்தில் 'பொறுக்கமுடியாத தலை வேதனை' என்று நாம் ஹாஸ்யேந யெழுதியிருப்பதைக் கண்டவிவர் அதனை ஸத்யேந நமக்காக வெழுதுகின்றார். *புருஷோத்தம தேவாஸ—ரவிபாக நிருக்திவித்* என்றே வேஷித்து உந்தி பறக்கலாமே; தடையென்ன? இவருக்கும் பொறுக்கமுடியாத தலைவேதனையாயிற்றே.

## — ஸம்விதாத்ருத்வ ஹநநாஹ—த்ருத்வ நிரூபகம். —

32. * ஸஹஸ்ரத்தாத்ரவாஹீ ஸம்விதாத்ருத்வ உபேக்ஷக: * என்று எளிதாக ச்லோக மியற்றக் கற்காதே கர்ண கடுவாய்க் கவியியற்றியிருக்குமவர்க்கு இவரே பரிவு காட்டத்

தகும். தேசிகனுக்கு அஸாதாரணமான விசேஷணங்கள் பதிறுயிரமிடலாமே யென்று நாம் நிர்வேதப்பட்டிருக்கிறோம். அதற்கென்ன பரிஹாரம்?

### — அஞ்ஜநாநந்தந வாக்யாக்ஷேப நிராஸ: —

33. நாமகாரருக்கு இங்கு இரண்டு நாமமாகவிவக்ஷையிருந்தால் *அஞ்ஜநாநந்தந க்ஷேத்ரா வாஹ்யாக்ஷேபைஸ்ஸஹ என்று எளிதாகக் கவியியற்றி யிருக்கலாமே. அசட்டுத் தனத்தை யொப்புக்கொண்டே தீரவேண்டியது தலைவிதியாகின்றதே. ஒரு பெரியவரிடத்தில் இருவர் மாணக்கர்கள் இருந்தனர். அவ்விருவர்க்கும் கவித்வத்தில் நப்பாசை. அதனுல் ஆசிரியர் "மொட்டஸாதானி குட்டையில் விழுந்தான்" என்பதை யிட்டுக் கவியியற்றும்படி இருவர்க்கும் நியமித்தார். ஒருவர் "பபாத வ்ருக்ஷே ஹஞ்ச ஷொட்டஸாதாநி நாஸக:" என்று எளிதாக இயற்றினர். மற்றொருவர் "ஷொட்டஸாதாநி வ்ருக்ஷே பதநம் அகாஷீ" என்று இயற்ற நினைத்து அது ச்லோகமாகக் கூடாமையாலே "ஷொட்டஸாவ்ருக்ஷே தாநி பத காஷீ அநம் ஹஸ்தெ" என்று வெகு ச்ரமப்பட்டு இயற்றினர். இந்த கதையை நாம்கேட்டிருந்ததுண்டேயொழிய இரண்டாவது வ்யக்தி இன்னாரென்று அறியப் பெற்றதில்லை. விவாதஸஹஸ்ர நாமத்தைக் கண்டபின்பு இந்த நாமகாரரே அந்த வ்யக்தியென்பதை நிச்சயித்துக்கொண்டோம். இதை முன்னமே விமர்சத்திலேயே நாம் காட்டியிருக்கிறோம். அப்படிப்பட்ட விசிஷ்டவ்யக்திக்குக் கைகொடுக்க முன்வரத்தகுந்தவர் இந்த மஹாநுபாவரேயாகவேணும். நாம் விமர்சநூலில் எடுத்துக்காட்டியுள்ள அவத்யங்களில் முப்பதிலொருபங்குகூட அந்தகர் பரிஹரிக்கப் புகவில்லை யென்பதையும், பரிஹரித்துவிட்டதாகக் காட்டினவைகளும் ஒவ்வோரக்ஷரமும் அஸம்பத்தமென்பதையும் மத்யஸ்த வித்வான்கள் நன்கறிவர்கள். இதற்குமேல் இவர் வைராக்யமடையாமல் தூஷணங்களை வெளியிடக் கடமைப்பட்டவர். ஸ்ரீகாஞ்சியில் வாழும் ஸ்ரீ. உ. வே. குளத்தூர் விஜயராகவாசாரியர், (காஞ்சீ) ஆண்டவனுச்ரமத்தில் வாழும் புரிசை வரதவேதாந்தாசாரியர் ........... போல்வாரான நவயுவாக்கள் பக்ஷபாதமில்லாமல் விவேகிக்க வல்லவர்களென்று நமது அபிப்ராயம். அப்படிப்பட்டவர்கள் எழுதியனுப்பும்விடைகளை நாமேநமதுபத்திரிகையில் வெளியிடுவோம். மாலோலவித்வத்ஸதஸ்ஸம்.

### — முடிவுரை —

34. அந்தகர் விமர்சபரீக்ஷாவில் (பாரா 3ல்) "விமர்சமானது 66 பாராக்கள் கொண்டது" என்கிறார். 87 பாராக்கள் கொண்ட நமது விமர்சத்தின் இரண்டாவது ஆஹ்நிகத்தில் இவர் அத்ருஷ்டிதோஷமிருப்பது மிகநன்றே. ஸ்ரீராமானுஜன் 109ல் வெளிவந்த முதலாஹ்நிகம் மட்டும 66 பாராக்கள் கொண்டது. 110ல் 67–87 பாராக்கள்கொண்ட இரண்டாமாஹ்நிகம் வெளிவந்திருப்பதைக் கண்டவரேயிவர். காணததுபோல் காட்டுவது க்ஷோபாய.

35. நம்முடைய அந்த விமர்சத்தில் முகவுரையென்னும் முதற்பகுதியில் ஸமாதானம் சொல்லவேண்டிய 14 பாராக்கள் இருப்பதாகவும், ஸ்ரீரங்கநாத பாதுகா பத்ராதிபராகிய ஸ்ரீ உ. வே. திருக்குடந்தை கண்ணன் ஸ்வாமியே அந்த முகவுரைக்கு ஸமாதானமெழுதக் கடமைப்பட்டவரென்றும், அவரே எழுதப்போவதாகத் தெரியவருகின்றதாகவும், 15-வது பாராமுதற்கொண்டு காணும் விமர்சங்களுக்கு அந்தகர்தாம் ஸமாதானம் விஜ்ஞாபனம் பண்ணுகிறதாகவும் முகப்பில் எழுதப்பட்டுள்ளது. நம்முடைய விமர்சநஸம்ஹாரநணியும் ஸஹா

விவேகியுமான ஸ்ரீ கண்ணன் ஸ்வாமிக்கும் அப்போதே நாம் நமது விமர்ச ஸஞ்சிகைகளை யனுப்பி ஸமாதாநம் தெரிவிக்கவேணு மென்று கடிதமெழுதியிருந்தோம். அவர், தமக்கும் நமக்கும் பரமாப்தராய் மாம்பலத்திலெழுந்தருளியிருக்கிற ஸ்ரீ. உ. வே. வித்வான் பூதேரி. பாஷ்யமையங்கார் ஸ்வாமி, M. A., L. T., அவர்கள் மூலமாய் நமக்குத் தெரிவித்த ஸந்தேஶமாவது, "தேசிக நாமாவளீ புஸ்தகப்ரகாஶநத்தில் எனக்கு யாதொரு ஸம்பந்தமும் கிடையாது; அதன் ப்ரயோஜநம் என்னிடம் வந்ததுமில்லை; தேவரீர் எழுதியுள்ள விஷயங்களில் பெரும்பாலும் விப்ரதிபத்தியில்லாதவனடியேன்: ஆகவே அடியேனிடமிருந்து வேறு எவ்விதமான ஸமாதானமும் தேவரீர் ப்ரதீக்ஷிக்க அவகாஶமில்லை. வெகு விரைவில் தேவரீரை நேரில் ஸந்தித்து மற்ற விஷயங்கள் விஜ்ஞாபனம் செய்து கொள்ளுகிறேன்" என்று. ஆனல் பிறகு ஸந்திக்க நேரவில்லை. அவரிடமிருந்து கிடைத்ததாக மேலே நாம் தெரிவித்த ஸந்தேஶம் ஸாக்ஷிகமாகையாலே இல்லைசெய்யப்போகாது. இது அந்ருத மென்னில் இதை ஸ்ரீ கண்ணன் ஸ்வாமியே பிரசுரம் செய்யட்டும்.

36. இந்த ப்ரஸங்கத்தில் மற்றொரு தத்துவமும் தெரிவிப்போம். அந்தகர் விமர்ச பரீக்ஷாலேஶத்தை யெழுதி அதை ஸ்ரீரங்கநாத பாதுகா பத்ரிகையில் பிரசுரிக்க முயன்றபோது பத்ராதிபரான கண்ணன் ஸ்வாமி ப்ரபலமாக ஆக்ஷேபித்தார்; இந்த வியாஸம் பத்ரிகையில் வெளிவருமானல் நமது பத்ரிகைக்கு மட்டுமல்லாமல் நமது ஸமூஹத்திற்கே மிகுந்த லாகவம் ஏற்படும். ஸமஞ்ஜஸமான விஷயம் லவலேஶமுமில்லாத மதுராந்தகருடைய வியாஸத்தை நமது பத்ரிகையில் பிரசுரிக்கத்தகாது என்று ஸ்ரீமதாண்டவன் ஸன்னிதிக்குத் தெரிவித்தார் கண்ணன் ஸ்வாமி. அப்படியிருந்தும் ஏதோ விஷமச் செயல்களினல் பங்குனிமாதப் பத்ரிகையில் (தொடரும்) என்று முடித்துச்சிறிது பிரசுரமாயிற்று. அது கண்ட கண்ணன் ஸ்வாமி 'அந்த அபத்த வ்யாஸம் தொடர்ந்து வெளிவருமாயின் நான் பத்ராதிப பதவியிலிருந்து விலகிக் கொள்வேன்' என்று ஆச்ரமத்திற்குத் தெரிவித்தார். அதை அநுஸரித்து சித்திரை மாதப் பத்ரிகையை அந்தகருடைய அபத்த வ்யாஸத்தின் தொடர்ச்சி யில்லாமலே வெளியிட்டார்கள். அதிலிருந்து ஒரு கிளர்ச்சி ஏற்பட்டதனல் சித்திரை மாதத்திற்குப் பிறகு பத்ரிகையே வெளிவராமல் நின்று விட்டதாம். 7, 8 மாதம் பத்ரிகை நின்று போகவே அந்தகருடைய அபத்த வியாஸத்தை அறவே நிறுத்தி பத்ரிகையை க்ரமமாக நடத்தி வரவேண்டிய தென்று நிச்சயித்து, சென்ற மாதத்தில் ஒரு பத்ரிகையை வெளியிட்டார்களாம். அதில் அந்தகருடைய அபத்த வ்யாஸம் தொடரவில்லையாம். இவ்விஷயங்களை நாம் நம்பெருமாள் ஸன்னிதியில் ஆச்ரமத்து அந்தரங்கர்கள் மூலமாகக் கேட்டு எழுதுகிறபடி. இதெல்லாம் அந்ருதமென்னில், தயாஷு. பத்ராதிபரான கண்ணன் ஸ்வாமி பண்டிதரும் பரீக்ஷகருமாதலால் அவரே முன்னின்று ஸமாதானங்களை யெழுதட்டும். அப்போது ஸத்யாஸத்யங்கள் உலகறிய நிற்குமன்றோ.

37. 'அஷ்டோத்தர ஶதநாமஸ்துதியின் வரலாறுரைத்தல்' என்ற மகுடத்தின்கீழ் விமர்ச நூலில் நாமெழுதியிருந்த தென்ன வென்றல் — "காஞ்சியில் ஒரு ஹைணை கலாசாலையில் நாற்பது வருஷங்களுக்கு முன்பு ஸம்ஸ்க்ருதோபாத்யாயராக இருந்த மன்ஸாலகெட்ட. கல்யாணஸாமி ஐயங்கா ரென்பவர் கவனம் செய்துகொண்டிருந்தார்; அவரைக் கொண்டு விவாஹ அஷ்டோத்தர நாமாவளி ஸ்துதியைச் செய்வித்துக் கொண்டார்கள்" என்று. இதைப் பற்றி அந்தகர் எழுதியிருப்பதாவது, இந்த அஷ்டோத்தரம் நானூறு ஆண்டுகட்கு முன்னமே நிர்மிதமான தென்றும் தென்மொழி வட மொழி வியாக்கியானங்களுடன் திருக்குடந்தையில் முன்னமே அச்சிடப்பட்டு மிருக்கிற தென்றும். — ஸத்ரா அஹ்ருதே. — இவர் எழுதி யுள்ளபடி திருக்குடந்தையில் அச்சிடப்பட்டிருப்பது வாஸ்தவமே. கல்யாணஸாமி யென்பவர்

பரமபதித்தே 20, 22 வருஷமாகிறது. அவர் எழுதினதுதான் அது. அவர் இயற்றிய தென்று வெளியிட்டால் மௌரவமாக இருக்குமா? இராதென்று கருதி வேறொருவரைக் கர்த்தாவாக வைத்திருக்கிறது. இதில் நமக்கு யாதொரு ஆக்ரஹமுமில்லை. அந்த கல்யாண ஸாமி யென்பவர் ஒரு அஷ்டோத்தரம் செய்தது உண்மை. அது வேறாக இருந்தால் இருக்கட்டுமே. இதில் போராட நாம் வரவில்லை; இது மிகச் சிறு விஷயம். கர்த்தா யாராயிருந்தா லென்ன? அந்த அஷ்டோத்தரத்தில் தலையான வொரு பிறழ்வு நாம் காட்டியிருக்கிறோம். (அதாவது விமர்ஶத்தில் 17-வது பாரா—) “ஸத்ஸம்ப்ரதாய ஸ்திரதீ: என்கிற ஸமஸ்தமான ஒரு திருநாமத்தை வ்யஸ்தமாக்கி [இரண்டு நாமமாக்கி] (ஸத்ஸம்ப்ரதாயாய நம:, ஸ்திரதியே நம:) என்று பதிப்பித்துவிட்டார்கள். ஸத்ஸம்ப்ரதாய: என்று ஸ்வாமிக்கு ஒரு திருநாமமிருக்குமா வென்று இதையும் ஆலோசிக்கமாட்டிற்றிலரந்தோ. ந்யாஸ விம்ஶதியில் ஆசார்ய லக்ஷண ச்லோகத்தில் “ஸித்தம் ஸத்ஸம்ப்ரதாயே” என்று ஸ்வாமி ஸாதித்திருக்கிறோேயல்லது வேறாக இல்லை. ஸந் ஸம்ப்ரதாயோ யஸ்ய ஸ:—ஸத்ஸம்ப்ரதாய: என்று கொள்ளக் குறையுண்டோ? என்பர்கள். என்ன குறை? ஒரு குறையுமில்லை உபகர்த்தா என்கிற திருநாமத்திற்குமேல் நாலெழுத்து குறைபடுவதற்கு (சைவ சைவ, என்று போட்டுவிட்டால் அக்குறையும் தீர்ந்துவிடும். ‘உபகர்த்தா சைவ சைவ’ என்று ச்லோகம் படிக்கவேண்டும் போலும். இவர்களுடைய ஸம்ப்ரதாயத்தில் வித்வான்களுக்கு ஊஹாக்ஷமில்லையே. விஶேஷஜ்ஞரான வொரு சிறந்த வித்வானுக்குக் காண்பித்துக் குற்றங்குறைகளைக் களைவித்து வெளியிட்டிருக்கலாகாதா? வீணாக எவ்வளவுபணச்செலவு? ஸ்தாலீபுலாகமாக காட்டிற்று’ என்று.

38. இதற்கு அந்தகர் என்ன எழுதியுள்ளாரென்று பார்க்கவேணும். ஸத்ஸம்ப்ர தாய: என்பதற்கு நாம் எழுதியுள்ள வ்யுத்பத்தியையே இவரும் எழுதுகிறார். ‘சைவ சைவ’ போட்டு ச்லோகபூரணம் செய்யவேணு மென்று நாமெழுதினோம்; ‘அது வேண்டா; ததைவ ச என்று போட்டேயிருக்கிற தென்கிறாரிவர். இப்படிப்பட்ட ரசனைகளை உண்மையான பண்டிதர்கள் கண்டு சிரிக்கிறார்களென்பதைத் தெரிந்து கொள்ள வும் ஶக்தியில்லையேயிவர்க்கு. ஒரெழுத்திலும் இரண்டெழுத்திலும் மூன்றெழுத்திலும் நாமங்கள் இயற்றுகிறார்கள். இந்த நாமகாரரும் பெரும்பாலும் அப்படி யியற்றியுள்ளார். ததைவ ச என்று நாலெழுத்தை வீணாக நீட்டி ச்லோகபூரணம் செய்யவேண்டிய ஆவச்யகதை என்ன? என்று கேட்டால் அசட்டுத்தனந்தானென்பது தவிர வேறு விடையுண்டோ?

39. இதில் தீவ்ரஸம்வேகயுஜாநு என்று ஒரு திருநாமம். இதற்கு வியாக்கியானமுள்ள அழகுக்கு இவர்களே உகக்கவேணும். ஸ்வாமி ந்யாஸவிம்ஶதியில் * தீவ்ரஸம்வேகம் ஆப்யாயயேத் * என்று ஆசார்ய லக்ஷணம் ஸாதித்திருப்பதைப் பார்த்து எழுதின அழகான நாமமிது தீவ்ரஸம்வேகவானு என்றோ தீவ்ரவைராக்யவானு என்றோ தீவ்ரமுமுக்ஷுவானு என்றோ இருந்தாலும் அதற்கும் வியாக்கியானம் செய்து விட அருமையிலையன்றோ. இந்த அபத்தச் சுவடிகள் எக்கேடு கெட்டால் நமக்கென்ன? வ்ருத்தஶிஷ்டர்களான மஹான்களின் ப்ரவ்ருத்திக்குக் குறை யேற்படலாகா தென்பதே நமது விமர்ஶத்திற்குப் பரம ப்ரயோஜநம். உதாஸீநர்களின் பெயரால் வெளியிட்டிருந்தால் அழகிதாயிருந்திருக்குமே. பெரியோர் களின் பெயர் கெடாதே. எங்கள் பெரியோர்களுடைய பெருமை இவ்வளவே யென்கிறாரிவர்.

* ஸஜ்ஞானாவதாராய்: ஸர்வதர்மாவதாராய்த்தே விசேஷஜ்ஞ: ।
ஜ்ஞாநஸம்வர்த்தி தீவ்ரம் ஸம்வேகம் ஸம்ஜநயதி ॥ *

முதலடியில், எட்டிலாறிரண்டி லொன்றில் என்றது—எட்டெழுத்தாகிய திருமந்த்ரத்திலும், (ஆறிரண்டு) ஆறுபதமாய் இரண்டு கண்டமான த்வயத்திலும், (ஒன்று) ஒரு ச்லோகமான சரமச்லோகத்திலு மென்றபடி. மேலே எங்கும் என்றது இவற்றிலெங்குமென்றவாறு. இவற்றுக்கு உபாயோபேயங்களிலே நோக்காயிருக்கச் செய்தேயும் "ஆறு இயம்புவார்" என்று உபாயமொன்றையே சொல்லுகிறவிது ப்ராதாந்யத்தை யுத்தேசித்தென்க. உபேயம் உபாயாதீநமிறே.

விட்ட ஆறு-ந்யாஸதிலகத்தில் "यावदात्मनियतत्वत्पारतन्त्र्योचिता" என்றருளிச் செய்த நிலைக்கு எதிராயிருக்கையாலே அப்ராப்தமென்று விடப்பட்ட உபாயாந்தரங்களென்கை. * பத்திமுதலாமவற்றில் பதியெனக்குக் கூடாமல் * என்ற அடைக்கலப்பத்து முதற்பாசுரமும் இங்கே அநுஸந்தேயம். பற்றும் ஆறு—யாவதாத்மநியத த்வத் பாரதந்த்ர்யோசிதமென்று கொண்டு பற்றுமுபாயம் சரணாகதியென்க. * சரணாகதி யென்னும் சார்வுடன் மற்றொன்றை யரணாகக் கொள்ளாதா ரென்றதாயிற்று.

ஈற்றடியில் எட்டு மூன்றும் என்றது—எண் மூன்று இருபத்துநான்காய் *பொங்கைம் புலனும் பொறியைந்து மித்யாதியான திருவாய்மொழிப் பாசுரத்திற்படியே சதுர்விம்சதி தத்வாத்மிகையான ப்ரக்ருதியென்றபடி.

ஆக இந்தப் பிரபந்தத்தினால்—தாமருளிச்செய்த ஸம்ப்ரதாய பரிசுத்தி முதலாக ரஹஸ்யத்ரய சுளகாந்தமான பதினாறு ரஹஸ்யங்களில் சேமித்த பொருள்களை முப்பத்தொன்பது செய்யுளாக்கி உபகரித்தருளினாராயிற்று. ... ... *

ஸ்ரீ காஞ்சீ ப்ரதிவாதி பயங்கரம்
**அண்ணங்கராசாரியர் இயற்றிய**
தேசிகப் பிரபந்த வியாக்கியானத்தில்
முதற் பிரபந்தமான அம்ருத ரஞ்சனியின் வியாக்கியானம்
முற்றுப்பெற்றது.

தூப்புற்பிள்ளை பொன்னடிகள் போற்றி.

---

ஸ்ரீ:

தூப்புல்வள்ளல் தூமொழிகள் வாழி.

# தேசிகப் பிரபந்தத்தில்

## இரண்டாவது பிரபந்தம் – அதிகார சங்கிரகம்

அவதாரிகை:—ஸம்ப்ரதாய பரிசுத்தி முதல் ரஹஸ்யத்ரய சுளகமீறாகவுள்ள பதினாறு ரஹஸ்யங்களின் ப்ரமேயத்தைச் சுருக்கிப் பேசுமதான அம்ருதாஞ்சனி யென்னும் பிரபந்தம் முதற்பிரபந்தமாகத் தலைக்கட்டிற்றாயிற்று. இனி, பதினேழாவது ரஹஸ்யம் குருபரம்பரா ஸாரமென்பது; பதினெட்டாவது ரஹஸ்யம் ஸ்ரீமத்ரஹஸ்யத்ரயஸாரம். ஆக இவ்விரண்டு ரஹஸ்யங்களுக்கும் ஸாரார்த்த ஸங்க்ராஹகமாயமைந்தது இவ்வதிகார சங்கிரகம். குருபரம்பராஸாரமும் ரஹஸ்யத்ரயஸாரத்திற் சேர்ந்ததென்று சிலர் மருண்டிருப்பதுண்டு. அங்ஙனே யல்ல; குருபரம்பராஸாரமென்பது தனிப்பட்ட ரஹஸ்யநூலென்று உணர்க.

இப்பிரபந்தத்தில் முதலாறு பாசுரங்கள் குருபரம்பராஸாரத்தைச் சார்ந்தவை. ஏழாவது பாசுரம் முதல் முழுவதும் ரஹஸ்யத்ரயஸாரத்திற் சேர்ந்தவை; அதிலுள்ள அதிகாரங்களின் ஸாரார்த்தங்களைச் சுருக்கிச் சொல்லுமவை யென்றபடி. ... ... *

பொய்கைமுனி பூதத்தார் பேயாழ்வார் தண்பொருநல்வருங்குருகேசன் விட்டுசித்தன்
துய்யகுலசேகரனம்பாணநாதன் தொண்டரடிப்பொடி மழிசைவந்தசோதி
வையமெலாம் மறைவிளங்க வாள்வேலேந்தும் மங்கையர்கோ னென்றிவர்கள் மகிழ்ந்துபாடும்
செய்யதமிழ் மாலைகள்நாம் தெளிய வோதித் தெளியாத மறைநிலங்கள் தெளிகின்றோமே. 1

பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், தாமிரபர்ணிக்கரையிலவதரித்த நம்மாழ்வார், பெரியாழ்வார், தூயமனத்தரான குலசேகராழ்வார், நம்மிடத்தே யருள்கொண்ட திருப்பாணாழ்வார், தொண்டரடிப்பொடியாழ்வார், திருமழிசைச் சோதியான மழிசைப்பிரான், எல்லாவுலகிலும் வேதப்பொருள்கள் விளங்கும்படி வாளையும் வேலையு மேந்தியுள்ள திருமங்கையாழ்வார்—என்னு மிவ்வாழ்வார்கள் ஆனந்தம் பொலியப் பாடியருளின செந்தமிழ் மாலையான திவ்வியப் பிரபந்தங்களை நாம் தெளிவாக அதிகரித்து இவற்றைக்கொண்டு, தெளியாத வேதார்த்தங்களைத் தெளிந்து கொள்ளப் பெறுகின்றோம்.

திவ்யப்ரபந்தங்களுள் திருப்பாணாழ்வாரருளிச் செய்த அமலனாதிபிரானுக்கு மட்டும் முநிவாஹநபோகமென்று வியாக்கியானம் பணிக்க ஸ்வாமி ஆசார்ய நியமனம் பெற்றபடியாலே அவ்வாழ்வார் பக்கலில் தனிப்பட்ட ஈடுபாடு தோன்ற 'நம் பாண நாதன்' என்றார். "வாள்வலியால் மந்திரங்கொள் மங்கையர்கோன்" என்றபடி திருமங்கையாழ்வார் மறைவிளங்கச் செய்வதற்கு அவருடைய வாளும் வேலுமே மூலகாரணமாக நின்றமையால் "வையமெல்லாம் மறைவிளங்க வாள்வேலேந்தும்" என்றார். ஸம்ஸ்க்ருத வேதாந்த நிர்வாஹத்திற்கென்றே வேதாந்தாசார்யரென்று விருது சாத்தப்பெற்ற ஸ்வாமி அந்த ஸம்ஸ்க்ருத வேதங்களிலே தெளிவாகப்பொருள் காணப்பெறாமல் திவ்யப்பிரபந்தங்களிலேயே தத்வ ஹித புருஷார்த்தங்களை மிகத் தெளிவாகக் கண்டனராதலால் அதனாலுண்டான ஆனந்தத்தை உள்ளடக்கி யிருக்கமாட்டாமல் * செய்ய தமிழ்மாலைகள் நாம் தெளிய வோதித் தெளியாத மறை

*விலங்கள் தெளிகின்றோமே * என்று கல்வெட்டாக வருளிச்செய்தார். ஸம்ஸ்க்ருத வேதங்களுக்குத் தெளியாத மறைநில மென்றே திருநாமஞ் சாத்தினர் போலும். தமிழ் வேதத்திலே அந்வயம் பெறாமல் ஸம்ஸ்க்ருத வேதத்தில் மட்டும் நிரதர்களான மஹர்ஷிகள் * **निरस्तातिशयाह्लादसुखभावैकलक्षणा । भेषजं भगवत्प्राप्तिरेकान्तात्यन्तिकी मता ॥ तस्मात्तत्प्राप्तये यत्नः कर्तव्यः पण्डितैर्नरैः । तत्प्राप्तिहेतुर्ज्ञानं च कर्म चोक्तं महामुने ॥** * இத்யாதிகளாலே பகவத்ப்ராப்தியே பல்மாகவும் கர்மஜ்ஞாநாதிகளே உபாயமாகவும், இந்த்ராதி தேவதாந்தர்யாமியான ஈச்வரனே உத்தேச்யனுகையாலே இந்த்ராதி தேவதைகள் அநுவர்த்தநீயராகவு மாயிற்று (மஹர்ஷிகள்) சொல்லுவது. *தனக்கேயாக வெனைக்கொள்ளுமீதே* வழுவிலாவடிமை செய்ய வேண்டு நாம் * என்று கைங்கர்யம் புருஷார்த்தமாகவும், தத்ஸாதநமும் * நாகணை மிசை நம்பிரான் சரணே சரண் * அடிக்கீழமர்ந்து புகுந்தேன்* என்கிற ப்ரபத்தியாகவும், * மற்றொரு தெய்வம் தொழாள் *மறந்தும் புறந்தொழாமாந்தர்* என்று தேவதாந்தரங்கள் அநுவர்த்தநீயங்களல்லவாகவுமாயிற்று ஆழ்வார்களருளிச் செய்வது. இவையே தெளிந்த பொருளென்று திருவுள்ளம். இப்பொருள்களையேயன்றோ நாம் ஸாரமாகக் கொண்டிருப்பது.* (1)

இன்பத்தி லிறைஞ்சுதலில் இசையும்பேற்றில் இகழாத பல்லுறவில் இராகமாற்றில்
தன்பற்றில் வினைவிலக்கில் தகவோக்கத்தில் தத்துவத்தை யுணர்த்துதலில் தன்மையாக்கில்
அன்பர்க்கேயவதரிக்கு மாயன்நிற்க அருமறைகள் தமிழ்செய்தான் தாளேகொண்டு
துன்பற்ற மதுரகவி தோன்றக்காட்டும் தொல்வழியே நல்வழிகள் துணிவார்கட்கே. 2

இன்பத்தில்—“*அண்ணிக்கு மமுதூறும்*” *என்று முதற்பாட்டிற் சொல்லப்பட்டு* * இன்ப *மெய்தினேனென்றிரண்டாம் பாட்டில் அநுவதிக்கப்பட்ட ஆநந்தரூபமான அநுபவத்தில்.*

இறைஞ்சுதலில்—“*மேவினேனவன்பொன்னடி*” *என்று கூறப்பட்ட சரணாஶ்ரயணத்தில்.*

இசையும்பேற்றில்—“*அப்யுபகமம் பண்ணும் புருஷார்த்தத்தில்;* * திரிதந்தாகிலும் *என்கிற மூன்றாம்பாட்டில்-பகவத்விஷயத்தை ஆழ்வாருகந்த விஷயமென்று அவ்வழியாலே இசைகின்றேனேயொழிய, ஆழ்வாரைத்தவிர்த்து பகவத்விஷயமானது எனக்கு ஸ்வத: இசையக்கூடியதன்றென்னுமளவும் தாத்பர்யமாகையாலே ஆழ்வாரே தமக்கு நிருபாதிகமாக இசையக்கூடிய புருஷார்த்தமென்று வ்யஞ்ஜிதமாகிற அர்த்தத்தை ஸங்க்ரஹித்தபடி.*

இகழாத பல்லுறவில்—*ஒருகாலும் சிதையாத பந்துத்வத்தில்;* ‘அன்னையாய் அத்தனாய்’ *என்றதை ஸங்க்ரஹித்தபடி.*

இராகம் மாற்றில்—“*அநுசிதமான விஷயத்திலுள்ள ஆசையைத் தவிர்த்ததில்;*” ‘முன்னெலாம்... நம்பினேன்; இன்று சதிர்த்தேன்” *என்றதில் நோக்கு.*

தன்பற்றில்—*தானே தன்பற்றை யுண்டாக்குகையில்;* “இன்றுதொட்டும்... தன்புகழேத்த வருளினான்.” *என்றதில் நோக்கு.*

வினைவிலக்கில்—*பாப நிவாரணத்தில்;* “பண்டை வல்வினை பாற்றியருளினான்.”

தகவு ஓக்கத்தில்—*கிருபையின் உத்கர்ஷத்தில்;* “அருள்கண்டீரிவ்வுலகினில்மிக்கதே.”

தத்துவத்தை உணர்த்துதலில்—*தத்வோத்போதகத்தில்;* “வேதத்தினுட்பொருள் நிற்கப்பாடி” *என்றதில் நோக்கு.*

தன்மை ஆக்கில்—ஸ்வரூப விகாஸத்தையுண்டாக்குவதில்; "செயல் நன்றாகத்திருத்திப் பணி கொள்வான்" என்றதில் நோக்கு.

இவை பத்தும் விஷயஸப்தமிகள்; இவை விஷயமாக என்றபடி. இவற்றுக்குத் "தோன்றக் காட்டும்" என்பதோடு அந்வயம். இவ்வர்த்தங்களை உட்கொண்டு ஸ்ரீமதுரகவிகள் அருளிச் செய்த என்றபடி.

[அன்பர்க்கே இத்யாதி.] ஆச்ரிதர்க்காகவே அவதரித்தருளுமவனான எம்பெருமான் நிற்கச்செய்தேயும் அவனை அநாதரித்து, வேதந் தமிழ்செய்த மாறன் சடகோபன் திருவடிகளையே ஆச்ரயித்துத் துயர்தீர்ந்த மதுரகவிகள் விளங்கக் காட்டியருளின வழியே முமுக்ஷுக்களுக்கு உபாதேயமான மார்க்கம். ஸர்வபலப்ரதனான ஸர்வேச்வரனிருந்தாலும் ஸதாசார்ய ஸமாச்ரயணமில்லாதார்க்கு மோக்ஷங்கிடையாதென்று முறையிடுகின்ற மதுரகவிகளுடைய உக்தியும் அநுஷ்டாநமுமே ஆதரணீயமென்றபடி. ... (2)

என்னுயிர்தந் தளித்தவரைச் சரணம் புக்கியானடைவே யவர்குருக்கள் நிரை வணங்கிப்
பின்னருளால் பெரும்பூதூர் வந்த வள்ளல் பெரியநம்பி யாளவந்தார் மணக்கால் நம்பி
நன்னெறியை யவர்க்குரைத்த வுய்யக் கொண்டார் நாதமுனி சடகோபன் சேனை நாதன்
இன்னமுதத் திருமகளென் றிவரை முன்னிட்டு எம்பெருமான் திருவடிகளடைகின்றேனே. 3

"லக்ஷ்மீநாத ஸமாரம்பாம்—அஸ்மதாசார்ய பர்யந்தாம் வந்தே குருபரம்பராம்" என்கிற ஆழ்வானுடைய திவ்யஸூக்தியைத் திருவுள்ளத்திலேகொண்டு [ஆரோஹணக்ரமத்திலே] ஸ்வாசார்யன்தொடங்கி ப்ரதமாசார்யனான பரமபுருஷனளவும் செல்ல ஆசார்யபரம்பரையை ஆச்ரயிப்பதாக அநுஸந்திக்கும் பாசுரமிது. என்னுயிர்தந்தளித்தவர் என்று தம்மையுஜ்ஜீவிப்பித்த ஸ்வாசார்யரான கிடாம்பியப்புள்ளாரை முன்னிட்டுக்கொண்டு தொடங்குகின்றார். என்னையுஜ்ஜீவிப்பித்த ஆசார்யரை அடியேன் சரணமடைந்து அவருடைய ஆசாரியர்களின் பங்க்தியை அடைவே வணங்கி, பிறகு பரமகிருபையினால் ஸ்ரீபெரும்பூதூரிலவதரித்த பரமோதாரரான எம்பெருமானாரென்ன, அவருடைய ஆசார்யரான பெரியநம்பியென்ன, அவருடைய ஆசார்யரான ஆளவந்தாரென்ன, அவருடைய ஆசார்யரான மணக்கால்நம்பியென்ன, அவர்க்கு ஸதுபாயமான ப்ரபத்தியை யுபதேசித்த உய்யக்கொண்டாரென்ன, ததாசார்யரான ஸ்ரீமந்நாதமுனிகளென்ன, அவருடைய ஆசார்யரான நம்மாழ்வாரென்ன, அவருக்குமாசார்யரான ஸேனைமுதலியாரென்ன, இனிய அமுதம்போன்ற பெரியபிராட்டியாரென்ன ஆக இந்த ஆசார்யபரம்பரையை வணங்கி இவர்களை முன்னிட்டுக்கொண்டு எம்பெருமான் திருவடிகளை ஆச்ரயிக்கின்றேன் என்றாராயிற்று. ... ... (3)

ஆரண நூல்வழிச் செவ்வை யழித்திடு மைதுகர்க்கோர்
வாரணமா யவர் வாதக் கதலிக.. மாய்த்தபிரான்
ஏரணி கீர்த்தி யிராமாநுசமுனி யின்னுரைசேர்
சீரணி சிந்தையினோம் சிந்தியோமினித் தீவினையே. 4

கீழ்ப்பாட்டில் பொதுவாக ஆசார்யபரம்பராச்ரயணம் சொல்லிற்று. * नाथोपज्ञं प्रवृत्तं बहुभिरुपचितं यामुनेयप्रबन्धैः त्रातं सम्यग्यतीन्द्रैरिदमखिलतमःकर्शनं दर्शनं नः * என்று தாமேயருளிச் செய்துள்ளபடி நம்தர்சனத்திற்கு ஸ்ரீமந்நாதமுனிகள் ஆளவந்தார் எம்பெருமானார் ஆகிய இம்மூவர் உயிர்போன்றவர்களாதலால் இவர்களுக்குத் தனித்தனியே மூன்று பாசுரங்களிட வேணுமென்று திருவுள்ளம்பற்றி முன்னம் இப்பாட்டினால் எம்பெருமானாரையிறைஞ்சுகின்றார். ஸ்ரீமத்வேதமார்க்க ப்ரதிஷ்டாபநாசார்யரென்ற நம்மாசிரியர்களின் விருதுக்கு எதிர்த்தட்டாக

வேதசாஸ்த்ரமார்க்கத்தை யழிப்பவர்களான கௌதஸ்குதர்களையடக்குவதற்கு ஒப்பற்றயானையாய்வந்து அவர்களது துர்வாதமாகிற வாழைமரங்களை அவலீலையாக முடித்த மஹோபகாரகரும் மஹாயசஸ்வியுமான பகவத்ராமாநுஜருடைய பரம மதுர திவ்யஸூக்திகளிலேயுள்ள சீர்மைகளை அலங்காரமாகக்கொண்ட சிந்தையையுடையோமானோம்; இனி நமது கொடிய கருமங்களைப்பற்றின விசாரம் நமக்கில்லை.

ஹைதுக: என்ற வடசொல் ஐதுகர் என்று திரிந்தது. சாஸ்த்ரப்ரமாணங்கொண்டு எது சொன்னாலும் 'தத் குத:? ஏதத் குத:?' என்று ஹேதுப்ரச்நமே செய்கிற விதண்டாவாதிகள் ஹைதுகரெனப்படுவர். .... .... (4)

நீளவந் தின்று விதிவகை யால்நினை வொன்றியநாம்
மீளவந் தின்னும் வினையுடம் பொன்றி விழுந்துழலாது
ஆளவந் தாரென வென்றருள் தந்து விளங்கியசீர்
ஆளவந் தாரடி யோம்படி யோமினி யல்வழக்கே. 5

*ஏவம் ஸம்ஸ்ருதி சக்ரஸ்தே ப்ராம்யமாணே ஸ்வகர்மபி:* என்கிறபடியே அநாதிகாலமாக ஸம்ஸாரத்திலேயே உழன்றுவந்து இப்பிறவியில் ஒரு பாக்ய பரிபாகத்தினால் ஸத்விஷய சிந்தை பொருந்தப்பெற்ற நாம், மறுபடியும் இந்த ஸம்ஸார நிலத்திலே வந்து பிறந்து இன்னமும் கர்ம சரீரத்திலே சேர்ந்து நரகத்தில் விழுந்து வருந்ாதபடிக்குடலாக நம்மை ரக்ஷிக்க வந்தவரென்று சொல்லும்படி யுள்ளவராய், துர்வாதிகளை வென்றவராய், நம்போல்வாரிடத்தே கருணை புரியுமவராய், எங்கும் விளங்கிய திருக்கல்யாண குணங்களையுடையவரான ஆளவந்தார் திறத்தே நாம் அடிமைப்பட்டோம்; இனிமேல் அநீதிகளில் அந்வயிக்கப் பெறுவோமல்லோம்.

பகவத்யாமுநாசார்யருக்கு ஆளவந்தாரென்கிற விருது ராஜஸபையில் கிடைத்தது. ராஜமஹிஷி தன்னை யாளவந்தாரென்று கொண்டு அந்த விருதையளித்ததாகச் சொல்லுவர். இங்கு ஸ்வாமி யருளிச்செய்வது நம்மை யாள்வதற்கு வந்தவரென்கிற பொருள் மிகப் பொருந்து மென்று. ... ... ... (5)

காளம் வலம்புரி யென்னநற் காத லடியவர்க்குத்
தாளம் வழங்கித் தமிழ்மறை யின்னிசை தந்தவள்ளல்
மூளுந் தவநெறி மூட்டிய நாத முனிகழலே
நாளுந் தொழுதெழு வோம்நமக் கார்நிகர் நானிலத்தே. 6

ஆளவந்தார்க்குப் பிதாமஹரும் பரமாசார்யருமான ஸ்ரீமந்நாதமுனிகளை யிறைஞ்சும் பாசுரமிது. நாதமுனிகள் நம்மாழ்வாரை யோகதசையிலே ஸாக்ஷாத்கரித்து "நாதனுக்கு நாலாயிரமுரைத்தான் வாழியே" என்று அவ்வாழ்வார்க்கு வாழ்த்துப் பாசுரம் அமையும்படி அவரிடத்தில் நாலாயிர திவ்யப் பிரபந்தங்களைப் பூர்த்தியாக உபதேசம் பெற்று, அவற்றை கேவகாந குசலர்களாய்த் தம்முடைய பாகிநேயர்களான கீழையகத்தாழ்வான் மேலையகத்தாழ்வான் என்னு மிருவர்க்கு முதன் முதலாக உபதேசித்தருளினதாக ஐதிஹ்யமாகையாலே அதனை இப்பாட்டில் நிபந்திக்கிறார். அவ்விருவரும் காளத்தையும் வலம்புரியையும் போன்றவர்களாம். காஹள மென்ற வடசொல் காளமெனத் திரிந்ததாகித் திருச்சின்ன மென்கிற வாத்யத்தைச் சொல்லும். வலம்புரி யென்பது ப்ரஸித்தம். இவ்விரண்டு வாத்யங்களையும்

அவ்விருவர்க்கும் உவமையாகக் கூறியது—இவைபோல் மதுர கம்பீரமான கண்டத்வநியை யுடையவர்களென்கைக்காக. பக்தியிலும் குறையற்றவர்களென்கிறது நற்காதல் என்பதனால். இப்படிப்பட்ட அடியவர் என்றது—அவ்விருவரையுமாயிற்று. அவர்களுக்குக் கையிலே தாளத்தைக் கொடுத்து த்ராமிடப்ரஹ்ம ஸம்ஹிதையை மதுரமான தேவகானத்தோடு உபதேசித்தருளின மஹோபகாரகர் ஸ்ரீமந்நாதமுனிகள். அவர் இன்னமும் எப்படிப்பட்டவரென்னில்; [மூளுந் தவநெறி மூட்டிய] ப்ரபந்ந ஸந்தானத்திற் சேர்ந்தவர்களான நாம் அவகாஹிக்கத்தக்க சரணாகதி யோகத்தைப் பரவச் செய்தவர். *लोकेऽवतीर्णपरमार्थसमग्रभक्तियोगाय नाथमुनये* என்றுளவந்தா ரருளிச்செய்தபடியே பரமார்த்த ஸமக்ரபக்தியோகத்தை அவதரிப்பித்தவரென்றுமாம். இத்தகைய பெருமைவாய்ந்த ஸ்ரீமந்நாத முனிகளின் திருவடிகளையே நாள்தோறும் வணங்கி உஜ்ஜீவிப்போமாக. இப்படிப்பட்ட நமக்கு இந்நிலவுலகத்தில் ஆரும் நிகரில்லை. ஆக இப்பாசுரங்களாலும் குருபரம்பராஸார விவரணமாயின. ... (6)

ஆளு மடைக்கல மென்றெமை யம்புயத் தாள்கணவன்
தாளிணை சேர்ந்தெமக் கும்மவை தந்த தகவுடையார்
மூளு மிருட்கள் விளமுயன் றோதிய மூன்றினுள்ளம்
நாளு முகக்கவிங் கேநமக் கோர்விதி வாய்க்கின்றதே, 7

எம்மை ரக்ஷ்ய வஸ்துவாகக் கொண்டு காத்தருள்வனென்று துணிந்து லக்ஷ்மீநாதனை பெருமானுடைய உபய பாதங்களையும் சரணமாகப் பற்றினவர்களாயும், எமக்கும் அத்திருவடிகளையே தஞ்சமாகக் காட்டிக்கொடுத்தவர்களாயும், பரமக்ருபாநிதிகளாயுமுள்ள ஆசாரியர்கள், நம்மிடம் வளர்ந்து செல்கின்ற அஜ்ஞாநாந்தகாரம் தொலைய வேண்டுமென்று முயன்று உபதேசித்தருளின ரஹஸ்யத்ரயத்தின் உட்கருத்தை இந்நிலத்தில் எந்நாளுமநுஸந்தித்துக் களிக்குமாறு நமக்கொரு பாக்ய விசேஷம் வாய்த்திருக்கின்றதே!

இப்பாட்டும் அடுத்த பாட்டும் ரஹஸ்யத்ரயஸார உபோத்காதாதிகாரத்தைச் சேர்ந்தவை. (7)

திருவுடன் வந்த செழுமணி போல்திரு மாலிதயம்
மருவிட மென்ன மலரடி சூடும் வகைபெறுநாம்
கருவுடன் வந்த கடுவினை யாற்றில் விழுந்துழலாது
அருவுட னைந்தறி வாரருள் செய்ய வமைந்தனரே. 8

(எம்பெருமான் கடல்கடைந்தருளின காலத்திலே) ஸ்ரீமஹாலக்ஷ்மியோடு கூடத் தோன்றிய ஸ்ரீகௌஸ்துப மணியானது எப்படி திருமாலின் திருமார்பை இடமாகக் கொண்டுளதோ அப்படியே நமக்கும் அந்தத் திருமார்புதான் உறையுமிடமென்னலாம்படி யிருக்கின்றவர்களாயும், அவனது திருவடித்தாமரைகளைச் சென்னிக்குமலர்ந்த பூவாகச் சூடுகின்றவர்களாயுமுள்ள நாம் *கருவிருத்தக் குழியிலிருந்தே தொடர்ந்து வருகின்ற கொடிய கருமமாகிய பெருவெள்ளத்திலே விழுந்து கரைசேரப் பெறுமல் அந்த வெள்ளத்தின் வழியே போகாதபடிக்கு அர்த்தபஞ்சகஜ்ஞானசாலிகளான நம் ஆசாரியர்கள் நமக்கருள்செய்ய அமைந்திருக்கின்றார்கள்.

மூன்றுமடியின் முடிவில் உழலாது, ஒழுகாது – பாடபேதங்கள்.

சேஷத்வமே வடிவாகவுள்ள நமக்கு எம்பெருமானுடைய திருவடித்தாமரைகளே ஒதுங்குமிடமாயிருக்கச் செய்தேயும் ஸ்ரீகௌஸ்துபம்போலே திருமார்விலே அணையப்பெறுவதுமுண்டு. "பரதாக்ரூர மாருதிகளைப் பரிஷ்வங்கித்த மணிமிகுமார்பிலே குருமா மணியாய் அணையும் வஸ்துவுக்கு" என்ற ஆசார்யஹ்ருதய ஸூக்தி இங்கே அநுஸந்தேயம். சாஸ்த்ரங்

களிலே ஜீவாத்மாவைக் கௌஸ்துபஸ்தாநீயமாகக் கூறியிருப்பது முணரத்தக்கது. முதலடியில் இதயம் என்றது ஹ்ருதயமென்ற வடசொல் திரிபு. ஐந்து அறிவார் என்ற விடத்தில் *प्राप्यस्य ब्रह्मणो रूपं प्राप्तुश्च प्रत्यगात्मनः। प्राप्त्युपायं फलं प्राप्तेस्तथा प्राप्तिविरोधि च। वदन्ति सकला वेदाः सेतिहासपुराणकाः * என்ற ப்ரமாணமும் * மிக்க விறை நிலையும் மெய்யா முயிர்நிலையும், தக்க நெறியும் தடையாகித் தொக்கியலு மூழ்வினையும் வாழ்வினையு மோதுங் குருகையர்கோன் யாழி னிசை வேதத்தியல் * என்ற திருவாய்மொழித் தனியனும் காணத்தக்கன. ஐந்து அர்த்தங் கள் இன்னின்னவை யென்பதை ஸ்வாமி தாமே மேல் பதினோராம் பாட்டிலே வகுத்துக் காட்டி யருளுகின்றார். ஈற்றடியில் அருவுடன் என்றது உள்ளுறை பொருள்களோடு கூட என்றபடி. ரூபி என்னும் வடசொல் உரு என்று திரிவதுபோல அரூபி என்னும் வடசொல் அரு வென்று திரியும். எனவே ஸூக்ஷ்மமானது என்று தேறும். ... ... ... (8)

அமையா விவையெனு மாசையி னுலறு மூன்றுலகில்
சுமையான கல்விகள் சூழவந் தாலுந் தொகையிவையென்று
இமையா விமையவ ரேத்திய வெட்டிரண் டெண்ணிய நம்
சமயா சிரியர் சதிர்க்குந் தனிநிலை தந்தனரே. 9

'இதுவரை நாம் கற்ற கல்விகள் அபர்யாப்தங்கள்; இன்னமும் எவ்வளவோ கற்கவேணும்' என்று கிளர்ந்த ஆசையினால் உலகில் சுமையாகவுள்ள அஷ்டாதசவித்யாஸ்தானங்களாகிய கல்விகள் முழுவதும் கற்கப்படினும் 'இவை பதினெட்டென்று ஒரு எண்ணிக்கைதான்' என்று கொண்டு, [அதாவது, எண்ணிக்கையில் பெரியதேயொழிய இவற்றில் ஸாராம்ஶ மொன்றுமில்லை யென்றுகொண்டு] நித்யஸூரிகளாலும் கொண்டாடப்படுகின்ற ரஹஸ்ய த்ரயத்தையே சேமவைப்பாகக்கொண்ட நம்முடைய தர்சநப்ரவர்த்தகர்களான ஆசார்யர்கள் ஸாரக்ராஹிகளாம் நிலைமையை நமக்கு அநுக்ரஹித்தார்கள்.

வித்யாஸ்தானங்களெல்லாவற்றிற் காட்டிலும் திருமந்த்ரம் த்வயம் சரமச்லோக மென்கிற ரஹஸ்யத்ரயமே ஸாரார்த்தங்கள் பொருந்தியவையென்றும், இந்த ரஹஸ்யத்ரய மானது நித்யஸூரிகளுக்கும் உபாதேயமான தென்றும், இதையே நம் ஆசாரியர்களும் நமக்குத் தஞ்சமாக உபதேசித்து நம்மை நல்வழிப்படுத்துகின்றனரென்றும் சொல்லிற்று யீற்று. இது ஸாரநிஷ்கர்ஷாதிகாரத்திற்கான பாசுரம்.

மூன்றாமடியில், எட்டிரண்டென்றது, அஷ்டாக்ஷரமான பெரியதிருமந்த்ரத்தையும், வாக்யத்வயமான த்வயத்தையும், अर्धद्वय மான ச்லோகத்தையும் சொன்னபடி. ஆகவே இரண்டு என்றசொல் *एकयोक्त्या पुष्पवन्तौ दिवाकरनिशाकरौ* என்னும் ந்யாயத்தாலே த்வய சரமச்லோகங்களைத் தெரிவித்ததாயிற்று. ... ... (9)

நிலைதந்த தாரகனாய் நியமிக்கு மிறைவனுமாய்
இலதொன்றிலாவகை யெல்லாம் தனதெனு மெந்தையுமாய்த்
துலையொன் றிலையென நின்ற துழாய்முடியானுடம்பாய்
விலையின்றி நாமடி யோமெனும் வேதியர் மெய்ப்பொருளே. 10

வைதிகர்களான நம் ஆசாரியர்களின் உண்மையானஸித்தாந்தம் எதுவென்றால்; ஸகலபதார்த் தங்களுக்கும் ஸத்தையைக்கொடுத்து அவற்றைத் தரிப்பவனாய், தரிப்பதுமட்டுமன்றிக்கே நியமிப்பதும் செய்யுமீசனாய், தனக்கு சேஷமல்லாத வஸ்து ஒன்றுண்டென்று கூறமுடியாத

படி ஸகல பதார்த்தங்களும் தனக்கே உரியதென நின்ற ஸ்வாமியுமாய், தனக்கு நிகரின்றிக்கே நின்றவனுமாய், திருத்துழாயை முடியிற் சூடியவனுமான பெருமானுக்கு நிருபாதிகமாக நாம் அடிமைப்பட்டிருக்கின்றோமென்பதுவேயாம்.

இப்பாசுரம் ப்ரதாநப்ரதிதந்த்ராதிகாரத்தைச் சேர்ந்தது. நம்முடைய விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்திற்கு சரீராத்மபாவமே ப்ரதாநப்ரதிதந்த்ரார்த்தமென்று கொள்ளப்பட்டுள்ளது. ஸகலசேதநாசேதநங்களும் எம்பெருமானுக்கு சரீரமாய் அவன் சரீரியாயிருக்குமிருப்பையறியப்பெற்றால் நூற்களில் ஆங்காங்குக்காணும் அபேதவாதங்களை எளிதாக ஸமந்வயப்படுத்த முடியுமென்பது நம் ஆசாரியர்களின் திருவுள்ளம்.

* स्थित्युत्पत्तिप्रवृत्तिग्रसननियमनव्यापनैरात्मनस्ते शेषोऽशेषः प्रपञ्चो वपुरिति भवतस्तस्य चाभेदवादाः । सर्वं खल्वेतदात्म्यं सकलमिदमहं तत्त्वमस्येवमाद्या व्याख्याता रङ्गधामप्रवण विजयिभिर्वैदिकैस्सार्वभौमैः ॥ * என்கிற பட்டர் ஸ்ரீஸூக்தியினால் [ஸ்ரீரங்கராஜஸ்தவே – உத்தரசதகே] இவ்விஷயம் அறுதியிடப்பட்டிருப்பது காண்க. எம்பெருமானுக்கு ஸகலப்ரபஞ்சமும் சரீரமென்றால் சரீரலக்ஷணமின்னதென்று தெரிந்துகொள்ள வேண்டுவது அவசியமல்லவா? சரீரலக்ஷணத்தைப் பலர் பலவாறாகச் சொல்லுவார்கள். அதுவொன்றும் பொருந்தாதென்று ஸ்வாமியெம்பெருமானார் அருளிச்செய்த லக்ஷணம் *यस्य चेतनस्य यद् द्रव्यं सर्वात्मना स्वार्थे नियन्तुं धारयितुं च शक्यं तच्छेषतैकस्वरूपं तत्तस्य शरीरम्* என்பது. இந்தவிதமான சரீரலக்ஷணம் சேதநாசேதநாத்மகமான ஸகலப்ரபஞ்சங்களிலும் ஸமந்விதமாகக் குறையில்லை. மேலேயுதாஹரித்த பகவத் பாஷ்யகாரதிவ்யஸூக்தியைத் *தழுவியே இப்பாசுரம் பணிக்கப்பட்டதென்றுணர்க.

பொருளொன் றெனநின்ற பூமகள் நாத னவனடிசேர்ந்து
அருளொன்று மன்ப னவன்கொ ளுபாய மமைந்தபயன்
மருளொன் றியவினை வல்விலங் கென்றிவை யைந்தறிவார்
இருளொன் றிலாவகை யெ(ம்)ன்மனந் தேற வியம்பினரே. 11

“ஏகமேவாத்விதீயம்” என்னும்படி நின்ற லக்ஷ்மீபதியான ஸர்வேச்வரனும், அவனது திருவடிகளைத் தஞ்சமாகப்பற்றி அவனுடைய க்ருபையிலே பொருந்தக்கடவனாய் பக்தனை ஜீவாத்மாவும், அந்த ஜீவாத்மா கடைப்பிடிக்கும் உபாயமும், ஸ்வரூபாநுரூபமான புருஷார்த்தமும், அஜ்ஞானத்தோடு சேர்ந்த கர்மக்ரந்திகளாகிற விரோதியுமாகிய இவ்வர்த்தபஞ்சகத்தை நன்குணரப்பெற்ற ஆசாரியர்கள் அஜ்ஞானகந்தமுமின்றிக்கே எம்முடைய மனம் தெளிவுபெறுமாறு இவ்வர்த்தபஞ்சகத்தை உபதேசித்தருளினார்கள்.

*“மற்றெல்லாம் பேசிலுமென்கிறபடியே அறியவேண்டுமர்த்தமெல்லாம் இதுக்குள்ளேயுண்டு; அதாவது அஞ்சர்த்தம்” என்கிறபடியே பெரிய திருமந்திரத்தில் பரமாத்மஸ்வரூப, ஜீவாத்மஸ்வரூப, உபாயஸ்வரூப, புருஷார்த்தஸ்வரூப, விரோதிஸ்வரூபங்களாகிற அர்த்தபஞ்சகம் அறியக்கிடக்கையாலே அதனை இப்பாசுரத்தினால் நிரூபித்தருளினாராயிற்று. இது அர்த்தபஞ்சகாதிகாரப் பாசுரமிறே. ... ... (11)

தேற வியம்பினர் சித்து மசித்து மிறையுமென
வேறு படும்வியன் தத்துவ மூன்றும் வினையுடம்பில்
கூறு படுங்கொடு மோகமுந் தானிறை யாங்குறிப்பும்
மாற நினைந்தரு ளால்மறை நூல்தந்த வாதியரே. 12